KALKI
30.3.2008 ரூ.8.00
80 பக்கங்கள்

# கல்கி

குடும்பத்துடன் படிக்க...

## "பிரகாஷ்ராஜ் இப்படிப் பண்ணலாமா?"

- வேதனையில் இயக்குநர் விஜி






# Team Health Shoppe

**For Wellness**



# அரிது, அரிது ஆலோவேரா அரிது !

## இயற்கை முறையினாலான ஆலோவேரா பொருட்கள்

பாரம்பரியமான அழகு சாதன மற்றும் உணவு பொருட்களை வழங்குகிறோம்.
வாருங்கள், வாழ்க்கைக்கு மேலும் மெருகேற்றுங்கள்.








**Also Available :** • Flax Seed Powder • Flax Seed Oil • Organic Products • Olive Oil



**TEAM EUBIO CARE** (Division of CAL)



**வண்டலூர்:** டீம் ஹவுஸ், (Opp. Vandalur Zoo) ஜி.எஸ்.டி. ரோடு, போன்: 2275 0502

**அண்ணாநகர்:** பிளாட் 1200, Z பிளாக், 6வது அவென்யு, (லேபர் ஆபிஸர்ஸ் குவார்ட்டர்ஸ் அருகில்) Ph : 4269 3332

**இந்திரா நகர்:** 3வது அவென்யு, எண்.26, தரைதளம், கார்பரேஷன் ஷாப்பிங் காம்ப்ளக்ஸ், Ph : 4269 5115

**புரசைவாக்கம்:** எண்.23B, பேஸ்மெண்ட், பிரின்ஸ் டவர்ஸ் (அபிராமி மெகாமால் எதிரில்) புரசைவாக்கம் ஹை ரோடு, Ph : 4542 8898

**தி.நகர் :** பு.எண்: 2, ப.எண்: 60, லலிதாகிருஷ்ணா அபார்ட்மெண்ட், கிரி ரோடு, பாரதிராஜா மருத்துவமனை பின்புறம், ஜி.என்.செட்டிரோடு அருகில். Ph : 4269 4849

For bulk requirements : Team House - GST Road, (Opp. Vandalur Zoo), Vandalur, Ch - 48. Fax : 22750860.




சித்திரைச் சிறப்பிதழ் (13.4.2008) முதல்...
கல்கி
வாவ்!
அதிரடி மாற்றங்கள்
ஆச்சர்யமான பகுதிகள்
இனிப்பான செய்திகள்
ஈர்க்கும் பக்கங்கள்
உற்சாகப் போட்டிகள்
ஊக்கமூட்டும் பரிசுகள்
இது யூத் கல்கி
ஒவ்வொரு இளைஞர் கையிலும்!

# வட்டமேஜை

## நறுக்...சுறுக்...



'கன்யா கேல்வாணி திட்டம்' பற்றிப் படிக்கும் போது பெருமிதம் உண்டாகிறது. பத்தாவது முடிக்கும் போது 1000 ரூபாய் கையில் என்பது நல்ல முயற்சி.

**- உமா மோகன்தாஸ், திண்டுக்கல்**

'ஒரு சொம்பு ஜலம்' சிறுகதை அருமை. கதையின் முடிவு மனத்தை உருக்குவதாக இருந்தது.

**-கோ.கல்யாணசுந்தரம், கோயம்புத்தூர்**

அரசியலில் தற்காலிகப் புகழ் பெற சமயத்துக்கு ஏற்ற மாதிரி பேசவேண்டும்; நிரந்தரப் புகழ் பெற நிரந்தர உண்மைகளைப் பேசவேண்டுமென்ற தராகவின் பதில் சூப்பர்ப்.

**- ஏ.ஜி. கல்யாணசுந்தரம், மணியக்காரன்பாளையம்**

வேதனையில் உறங்கும் விதர்பா பருத்தி விவசாயிகளுக்கு, கோவையில் அளிக்கப்படும் பயிற்சி, வெளிச்சமும் நம்பிக்கையும் ஊட்டுகிறது!

**- கே.வி.ராமன், சென்னை**

குஜராத் அரசின் 'கர்மயோகி மந்திரம்' தமிழகத்துக்கு வருமா?

**- இரா.சக்கரபாணி, மதுரை**



'குஜராத் டுடே' படித்தபோது, தமிழகத்தில் இலவச தொலைக்காட்சிக்குச் செலவிடும் தொகையை வைத்து, புதிய மின் உற்பத்தித் திட்டங்கள் தொடங்கலாமே என்று தோன்றுகிறது.

**- யாழினி அன்புமணி, ஈரோடு**

குஜராத் மின் உற்பத்தி, விநியோக முறை பயனுள்ள முறையில் செயல்படுத்தப்படுவதை எடுத்துக்காட்டியது குஜராத் டுடே.

**- எஸ். உஷா சங்கர், சென்னை**

சினிமாவுக்குப் பாடல்கள் வேண்டாம்; உழைக்கும் மக்களுக்காகப் பாடல்கள் புனைவேன் - வித்தியாசக் குரல் எழுப்பியிருந்தார் 'கரிசல்குயில்' கிருஷ்ணசாமி.

**- எஸ். ராஜேஸ்வரி, திருச்சி**

அரசியல் லாப-நஷ்டக் கணக்கில் 'மௌனம் பழகு' என ராமதாஸுக்குச் சொல்லாமல் சொல்லியிருந்த கார்ட்டூன் 'நச்'சென்றிருந்தது.

**- சி.மகேஷ், திருச்சி**

'உலர்ந்து போகும் நிலம்' கவிதை யதார்த்தத்தின் உச்சம்.

**- வானவில் மூர்த்தி, கடலூர்**

வளர்ந்த நவராத்திரி பற்றி அற்புதமாக விளக்கியுள்ளார் த.கி.நீலகண்டன்.

**- ஆர்.ராஜாமணி, சென்னை**

'காஃபியா? டீயா?' சிறுகதை, தெளிந்த நீரோடை.

**- பி.ஆர்.மஹேந்திரநாத், சென்னை - 28**

# ஸ்வீட் போஸ்ட்

முழு வெள்ளைத் தாளில் ஒரு சிறு கரும் புள்ளி ஆறாத ரணம். மயிலிறகு கொண்டு வருடி மோடியால் குணப்படுத்த இயலும் என்று நம்புவோமாக.

- ஜே.ராஜன், வடலூர்

பல்வேறு காலகட்டங்களில் குஜராத்தில் நடந்த ஒருசில நிகழ்வுகளைக் கடுமையாக விமர்சனம் செய்துள்ள கல்கி, நல்லவைகளைச் சீர்தூக்கித் தட்டிக் கொடுத்திருப்பது நடு நிலைக்கு உதாரணம்.

- ஆர்.சுஜாதா, சென்னை

'ஃ (அக்கு)' திரைப்படத்தின் விமர்சனம் நறுக்...சுறுக்.

- ஜி.மாரியப்பன், சின்னமனூர்



போட்டா போட்டி, உலகத்தில்

## விமர்சனம்!

எந்தத் துறையிலும் நடப்பது சகஜம்தானே! பழைய நடிகர்களுக்கும் துணை நடிகர்களுக்கும் தற்சமயம் இறங்குமுகம் என்பது உண்மை!

- பி.ஆர். மஹேந்திரநாத் ராவ், சென்னை

'ஜாலி ஸ்டோர்ஸ்' பக்கம் மிக அருமை.

- ஆர். பிருந்தா இரமணி, மதுரை

'நெஞ்சத்தைக் கிள்ளாதே' படத்தின் டைட்டிலில் விளையாடிவிட்டீர்களே! 'நெஞ்சத்தைக் கிள்ளாததே'ன்னு நீங்கள் தலைப்பில் செய்த தவறுகூட ஒருவகை விமர்சனமாகிவிட்டதே!

- கவிஞர் அய்யாறு எஸ்.வாசுதேவன், சென்னை - 14




# கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர்:
**லக்ஷ்மி நடராஜன்**

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காட்டுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் :
**சீதா ரவி**

தலைமை உதவி ஆசிரியர் :
**மு.மாறன்**

வடிவமைப்பு :
**எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன், ச.கார்த்திகேயன்**

தொலைபேசி :
4343 8888, 2225 1522,
2225 0623, 2225 1324,

தொலைநகல் :
044 - 22251021

மின்னஞ்சல் - ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com

சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com

பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com

கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் - உள்நாடு :
ஒரு வருடம் : ரூ. 440/-
ஆறு மாதம் : ரூ. 220/-

வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 65 யு.எஸ்.டாலர்

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.









# வானில் கடைவிரிக்கும் வண்ணப் பாரம்பரியம்!

## கலர்ஃபுல் கல்ச்சர்!

தமிழருக்குப் பொங்கல் திருநாள் போல குஜராத்தியருக்கு மகர சங்கராந்தி. இத்திரு விழாவின்போது அகமதாபாத் உள்ளிட்ட அத்தனை குஜராத் நகரங்களிலும், வண்ண வண்ண காற்றாடிகள் வால் சுழித்தபடி வானை வட்டமிடுகின்றன. எண்ணங்களை வண்ணங்களில் குழைத்து, குஜராத்தியர்கள் கொண்டாடும் காற்றாடித் திருநாள் குறித்து இதோ சில தகவல் துளிகள்...

- பெரியவர் - சிறியவர் வித்தியாசமின்றி காற்றாடியும் கையுமாக அதிகாலையிலேயே ஆஜராகிவிடுகின்றனர். அவர்கள் காற்றாடி விட பெரும்பாலும் தேர்ந்தெடுக்கும் இடங்கள், மொட்டைமாடி, தெருக்கள், மைதானங்கள்... காகித காற்றாடி, துணிகளின் கலவையில் உருவான காற்றாடி, ஃபைபர் கிளாஸினால் ஆனது என வகைவகையாக காற்றாடிகள் வானில் வர்ணமடிக்கின்றன. மோட்டார் பொருத்தப்பட்ட காற்றாடிகள் ஒளியை உமிழ்ந்தபடி இரவு வானத்தில் நட்சத்திரங்களுக்குப் போட்டியாக ஜொலிக்கின்றன.
- இந்தத் திருவிழாவின்போது நடத்தப்படும் பலவிதமான போட்டிகளில், இதர மாநிலத்தவரும் போட்டியாளராகக் கலந்துகொள்வது வழக்கம்.
- ஜனவரி மாதம்தான் காற்றாடித் திருவிழா. எனினும், சில மாதங்களுக்கு முன்பே காற்றாடி தயாரிப்பு களைகட்ட ஆரம்பித்துவிடும். காற்றாடி விடுபவர்கள் பெரும்பாலும் இந்துக்களே; ஆனால், காற்றாடி தயாரிப்பவர்கள் முஸ்லிம்கள். இப்படியாக இந்து-முஸ்லிம் ஒற்றுமைக்கு காற்றாடிகள் பாலமிடுகின்றன. ஆனால், 'டீல்' விடுவதில் தோன்றும் உரசல்கள் சில நேரங்களில் மதக் கலவரங்களாகி

விடுவதுமுண்டு.

- சீனாவிலும்கூட காற்றாடித் திருவிழா வெகு பிரபலம். சீனக் காலண்டரின்படி ஒன்பதாம் மாதம் ஒன்பதாம் நாளில் காற்றாடி விட்டால், துர்ச்சகுனங்கள் தூரப் போகும் என்பது நம்பிக்கை.
- கடந்த இருபது ஆண்டுகளாக அகமதாபாத் சர்தார் படேல் மைதானத்தில், சுற்றுலா வளர்ச்சிக் கழகத்தால் நடத்தப்படும் அகில உலகக் காற்றாடிப் போட்டியில் கலந்து கொள்ள, வெளிநாடுகளிலிருந்தும் போட்டியாளர்கள் வருகின்றனர்.
- காற்றாடித் திருவிழாவின்போது, அகமதாபாத் 'பதங் பஜாரில்' இருபத்து நான்கு மணி நேரமும் காற்றாடி வியாபாரம்தான். இச்சமயத்தில் ஜப்பான், அமெரிக்க காற்றாடி நிபுணர்கள் 'பதங் பஜார்' வந்து காற்றாடி விற்பனை செய்கின்றனர்.

## குஜராத்தில், காற்றாடித் திருவிழாவின்போது நடக்கும் போட்டிகளில், வெளிநாடுகளிலிருந்தும் அதிகமானோர் ஆர்வத்தோடு கலந்துகொள்கின்றனர்!

- காற்றாடி நிபுணர் பானுபாய் ஷாவின் முயற்சியால், 1987ஆம் ஆண்டு அகமதாபாத்தில் துவங்கப்பட்ட காற்றாடி மியூசியத்தில், 1400க்கும் மேற்பட்ட காற்றாடி ரகங்கள் இருக்கின்றன. சுற்றுலாப் பயணிகளை ஈர்க்கும் ஓர் இடமாக அது இருக்கிறது.
- அகமதாபாத் மாநகராட்சியின் கட்டுப்பாட்டில் இருக்கும் இந்த மியூசியம், சரிவர பராமரிக்கப்படவில்லை என்ற குற்றச்சாட்டு உண்டு.
- 'காற்றாடி மாஞ்சா நூலில் கழுத்தறுபட்டு பறவைகள் இறந்துவிடுகின்றன. எனவே, காற்றாடித் திருவிழாவைத் தடை செய்க' என்று போர்க்கொடி தூக்க ஆரம்பித்திருக்கிறது ப்ளூ கிராஸ்.

• காற்றாடி நூல்

• காற்றாடி மியூசியம்

குஜராத் டுடே *Exclusive*

# குறுகிப் போச்சா குஜராத்தி மனசு?

## கலவரம் சொல்லும் உண்மை!

குஜராத், கட்ச், சௌராஷ்டிரா என்ற மூன்று பகுதிகளை உள்ளடக்கிய குஜராத் மாநிலம், 1600 கிலோமீட்டருக்கு நீண்ட கடற்கரை கொண்டது! இதன் விளைவாக, திரைகடல் ஓடி திரவியம் தேடும் இயல்பு குஜராத்தியர்களின் ஜீன்களில் இரண்டறக் கலந்து விட்டது.



குர்ஜா இனமக்கள் வந்து குடியேறிய பகுதி என்பதால் குஜராத் என்று பெயர். இம் மாநிலத்தின் வரலாறு கற்காலத்துக்கு முந்தையது என்கின்றனர் அகழ்வாராய்ச்சியாளர்கள். கிருஷ்ணாவதார காலத்தில் ஜராசந்தன் முற்றுகையின்போது, கிருஷ்ணரும் பலராமரும், தங்கள் இன யாதவ மக்களோடு மதுராவிலிருந்து குசஸ்தலையில் குடியேறினர். இதுவே பின் நாட்களில் துவாரகை என்றழைக்கப்படலாயிற்று. மதுராவில் பிறந்து, கோகுலத்தில் வளர்ந்து குஜராத் மண்ணோடு கலந்துவிட்ட கிருஷ்ணர், குஜராத்தியர்களின் உணர்வுகளிலும் கலந்துவிட்டவர். கிருஷ்ணாவதாரத்தை பூர்ணாவதாரம் என்பார்கள் - மானுடச் சிறப்புகளும் தத்துவத் தேடலும் இணைந்த இந்த அவதாரத்தின் பண்புகளை குஜராத்தியர்களிடம் காணலாம். இவர்கள் இயல்பில் ஆழ்ந்த பக்தி கொண்டவர்கள். மத வெறியர்கள் அல்ல.



கிட்டத்தட்ட நானூறு ஆண்டுகாலம் முஸ்லிம் மன்னர்களின் ஆட்சியின் கீழ் இருந்திருக்கிறது குஜராத். ஆங்கிலேயர்களின் ஆட்சிஅதிகாரத்தின் கீழ் குஜராத் சென்றபோது, 300க்கும் மேற்பட்ட சமஸ்தானங்களாகப் பிரிந்து கிடந்தது.

பின்னர், நாடு முழுவதும் ஆங்கிலேயர்களுக்கு எதிராக விடுதலை வேட்கை வீறு கொண்டு எழுந்தபோது, தாதாபாய் நௌரோஜியால் துவக்கப்பட்ட சுதந்

# Gold Loans for Women




## For purchase of Gold Coins & Jewellery

- Loan for buying Gold coins and gold jewellery
- Finance at competitive rates
- Finance from Rs.50,000 to Rs.2,00,000
- Gold coins available at all branches of Bank of India in 5,8,20,50 grams
- 999.9 purity fine gold
- Tamper proof ; Assay certified
- Available in different shapes



बैंक ऑफ इंडिया
Bank of India

*Relationships beyond banking.*

Visit us at www.bankofindia.co.in

*Conditions apply







திரப் போயில், காந்திஜி, சர்தார் வல்லபாய் படேல் என்ற இரண்டு இரத்தினங்கள் நாட்டுக்குக் கிடைத்தன. முகமது அலி ஜின்னாவுக்கும் பூர்விகம் குஜராத்தான். சுதந்திரம் பெற்றவுடன் சமஸ்தானங்களை சர்தார் படேல் இணைத்தபோது, 'பம்பாயோடு நாங்கள் சேரமாட்டோம். எங்களுக்கென தனித்த கலாசாரம் உண்டு. எங்களுக்குத் தேவை தனித்த 'குஜராத் மாநிலம்' என்ற போராட்டம் வெடித்தது. விளைவு, 1960ல் குஜராத் மாநிலம் அமைந்தது. டாக்டர் ஜீவராஜ் மேத்தாதான் முதல் முதல்வர்.

**ப**ல்வந்தராஜ் மேத்தா, கன்ஷ்யாம் ஓஜா, சிமன்பாய் படேல், மாதவ் சிங் சோலங்கி அமர்சிங் சௌத்ரி என 1997 வரை காங்கிரஸ் முதல்வர்கள்தான் குஜராத்தை ஆண்டனர். இதில் சோலங்கி மூன்றுமுறை முதல்வர். உட்கட்சிப் பூசலில் காங்கிரஸ் ஆட்சியை இழக்க, கேசுபாய் தலைமையில் பா.ஜ.க. ஆட்சிக்கு வந்தது. காங்கிரஸ் நிலைமையே பா.ஜ.க.விலும் தொடர, மீண்டும் காங்கிரஸ் முதல்வர்கள். 2001ல் நரேந்திர மோடி முதல்வரானார். இன்று இந்தியாவின் ஸ்டாராகிவிட்ட மோடியின் ஆட்சியில், குஜராத் தொழில் மற்றும் விவசாயத் துறையில் அதிவேக பாய்ச்சலில் முன்னேற, அரசியல் எதிரிகளும் வாயடைத்துப் போயுள்ளனர். எனினும், 2002ல் நடந்த கோத்ரா சம்பவத்தைத் தொடர்ந்து பின் விளைவாக நடந்த கலவரங்களை யாரும் மறந்துவிடவில்லை. 'அண்ணன் தம்பிகளாகப் பழகிய இந்து - முஸ்லிம்களை, அரசியல் ஆதாயத்துக்காக எதிரிகளாக மாற்றிவிட்டார் மோடி' என்ற குற்றச்சாட்டு அனைத்துத் தரப்பிலிருந்தும் அவரை நோக்கிப் பாய்ந்தது.

பாதுகாப்புக்காக, பிற மாநிலங்களுக்கு முஸ்லிம்கள் குடிபெயர வேண்டியிருக்கிறது என்கின்றன இஸ்லாமிய அமைப்புகள்.

''மோடியின் ஆட்சிக்கு எந்த களங்கமுமில்லை. முஸ்லிம்கள் இன்னமும் குஜராத்தின் மக்கள்தான்'' என்கிறார் வரலாற்றுப் பேராசிரியர் டாக்டர் ரிஸ்வான் கத்ரி. மேலும், ''குஜராத்தை ஆண்ட மன்னர்கள் முற்போக்கானவர்கள். பரோடாவை

# குஜராத் டுடே

*Exclusive*

ஆண்டு வந்த மகாராஜா சாயாஜி ராவ், தமது ஆளுகைக்குட்பட்ட பகுதியில் மத நல்லிணக்கத்தைப் பேணியதில் முதன்மை யானவர். குறுநில மன்னர்கள், சமஸ்தானங் களின் நிர்வாகத்துக்காக நகர்ஷேத் என்பவரை நியமித்திருந்தார்கள். அவர்களே மன்னருக்கும் மக்களுக்கும் ஓர் இணைப்புப் பாலமாகச் செயல்பட்டனர். இஸ்லாமியரான ஜூனாகத் மகாராஜா, நவராத்திரி திருவிழா ஊர்வலத்துக் குத் தலைமை வகித்துச் சென்றிருக்கிறார். ராணி ரூப்மதி என்ற இந்துப் பெண்ணை மணந்த இந்த மகாராஜா, ரூப்மதி பெயரில் பெரிய மசூதியே கட்டியிருக்கிறார். மத நல்லிணக்கத்துக்குச் சிறந்த எடுத்துக்காட்டு தான் குஜராத்தியர்கள் பாரம்பரியமாகக் கொண்டாடும் காற்றாடித் திருவிழா. எனவே, இந்து-முஸ்லிம் மக்களிடையே யாரா லும் பிளவு ஏற்படுத்த முடியாது'' என்கிறார் கத்ரி.

''வகுப்புவாதக் கலவரங்கள் குஜராத் துக்கு ஒன்றும் புதிதல்ல. அங்கங்கே மோதல் நடக்கும். போலீஸ் துப்பாக்கிச் சூடும் இருக் கும். ஆனால், அதையெல்லாம் மக்கள் மறந்து விட்டு அன்றாடப் பணிகளில் கவனம் செலுத்த ஆரம்பித்துவிடுவர். இது வாடிக்கை. ஆனால், 2002ல் நடந்த கலவரம் சற்று வேறுபட்டது. 'நீங்கள் தாக்குங்கள், உங்களை போலீஸ் கண்டு கொள்ளாது' என்கிற சமிக்ஞை பிறந்தது. இந்தத் தைரியத்தை யார் கொடுத்தது என்று சொல்வது மிகக் கடினம். இதனாலே சிறுபான்மையினர் மீது தாக்குதல் கட்டவிழ்த்துவிடப்பட்டது. ஆனால், இயல்பி லேயே குஜராத் மக்கள் மதவெறியர் அல்ல; வியாபாரத்தில் இருதரப்பும் இணைந்து செயல்பட வேண்டிய அவசியம் இருக்கிறது. பிளவுபட்ட மனங்கள் நிச்சயமாக ஒன்று சேரும். அதுதான் எல்லோரது விருப்பம்'' என்கிறார் 'இந்து' பத்திரிகையின் சிறப்புச் செய்தியாளரான மானஸ்தாஸ் குப்தா.

மேலும், ''முஸ்லிம்கள் மேல் இந்துக் களுக்குத் தீராத நெடும்பகை என்று எதுவும் கிடையாது. குஜராத்திகள் அமைதியை விரும்புகிறவர்கள், நல்லிணக்கத்தோடு வாழ ஆசைப்படுகிறவர்கள். ஆனால்,





நன்றி

# குஜராத் டுடே

*Exclusive*

•குஜராத் காந்தி நகர் ரோடு



•எல்வின்சன்...



•சுரேஷ்...

இங்கே சிறு பொறியும் பெரும் வகுப்புக் கலவரத் தீயாக மாறிவிடுவதுண்டு. காரணம், நிழல் உலக தாதாக்கள்தான். துரதிர்ஷ்டவசமாக அவர்களில் பெரும்பாலோர் இஸ்லாமியர்கள். கட்டப் பஞ்சாயத்து, ஆள் கடத்தல் என்று அராஜகத்தில் இறங்கி, வசதியான வர்த்தக குஜராத்திகளிடம் அவர்கள் வசூல் வேட்டை நடத்தி வந்தார்கள். இதனால், பணக்கார இந்துக்களுக்கு அவர்கள் மீது ஓர் ஆத்திரம் இருந்தது. கலவரச் சூழல் உருவாகும் சமயத்தில் பணக்காரர்கள், அப்பாவிகளை வன்முறைக்கு ஏவிவிடுகிறார்கள். இதில் ஒன்றுமறியாத இரு சமூகத்தினரும் பாதிக்கப்படுகின்றனர். 2002ல், அரசும் அமைதியாக இந்தப் போக்கை ஆதரிக்கும் விபரீதம் நிகழ்ந்தது. மற்றபடி, முஸ்லிம்கள் முழுக் கட்டுப்பாட்டில் எந்த வர்த்தகமும் இல்லை. கூலித் தொழிலாளர்கள், சிறு வணிகர்கள், கிராமங்களில் வட்டிக்குப் பணம் கொடுப்பவர்கள் முஸ்லிம்களாக இருக்கின்றனர். வர்த்தக ரீதியாக எந்த மோதலும் கிடையாது.

குஜராத்தில் பெரிய அளவில் தீவிரவாதச் செயல் இல்லை என்பது உண்மை. ஆனால், நாடு முழுக்க நாசவேலை செய்பவர்கள் பதுங்குவதற்கும் ஓய்வெடுக்கவும் குஜராத்துக்குத்தான் வருகிறார்கள். ஏனென்றால், அங்கிருந்து பாகிஸ்தானுக்குத் தப்பி ஓடுவது சுலபம். இந்தச் சூழலை மோடி அரசியல் ஆதாயத்துக்கு முழுக்க முழுக்க பயன்படுத்திக் கொள்கிறார். மிகவும் நுட்பமாக இது நடைபெறுகிறது. வெளிப்பார்வைக்குத் தெரியாது'' என்கிறார் குப்தா.

**மோ**டியின் தொகுதியான மணிநகரில் ஒரு கிறிஸ்தவப் பள்ளியில் பணியாற்றும், தமிழ்நாட்டைச் சார்ந்த எல்வின்சன், சுரேஷ் ஆகியோரைச் சந்தித்தபோது, ''2002ஆம் ஆண்டின் வடு எல்லோர் மனத்திலும் இருக்கவே செய்கிறது. இப்போதும் சிறுபான்மையினருக்குப் பிரச்னைகள் இருப்பது குறித்து இரு வேறு கருத்தில்லை'' என்றனர். ''ஆனால், பொருளாதார முன்னேற்றமும் ஆட்சி சீரமைப்பும் பிரமிப்பூட்டும் அளவுக்கு நிகழ்ந்துள்ளன'' என்றும் ஒப்புக்கொண்டனர்.

''இங்கே பெண்கள், இரவில்

தனியாக வெளியில் சென்றுவரலாம். காந்தி மாநிலத்து மக்கள், சமய நல்லிணக்கமும் சாத்வீகமும் கொண்டவர்கள்'' என்று தமிழ்ச் சங்கத் தலைவர் சாம் பசிவம் சொல்ல, ''2002 கலவரத்துக்குப் பிறகு குஜராத்தில் முஸ்லிம்கள், இரண்டாம் தர குடிமக்களாகத்தான் நடத்தப்படுகிறார்கள்'' என்று இஸ்லாமியர்கள் நொந்து பேசுகின்றனர்.

''இரண்டாம் தர குடிமக்கள் கூட அல்ல; மூன்றாம் தர குடிமக்களாக நடத்தப்படுகிறார்கள் முஸ்லிம்கள்'' என்று ஆவேசப்படுகிறார் பரதநாட்டிய கலைஞரான மல்லிகா சாராபாய். ''பொருளாதார வளர்ச்சியை வைத்து குஜராத்தைப் பார்க்காதீர்கள். இங்கே பெண்களுக்குப் பாதுகாப்பில்லை. பெண்கள் மட்டுமே படிக்கும் ஆசிரியர் பயிற்சிப் பள்ளியில் பெண்கள் மானபங்கப்படுத்தப்பட்டிருக்கிறார்கள். பயந்த சுபாவமுள்ள குஜராத் இளைஞர்களை, வியாபாரம் உண்டு தாங்கள் உண்டு என்று இருந்தவர்களை, வன்முறை பக்கம் திருப்பிவிட்டது மோடி அரசுதான்'' என்று குற்றம் சாட்டுகிறார். மேலும், ''மொத்த குஜராத்தியருக்கும் அவர் தலைவரல்ல. அவருக்கு எதிராக 49 சதவிகிதத்தினர் இருக்கின்றனர் என்பதை மறந்துவிடாதீர்கள்'' என்று சுட்டிக் காட்டுகிறார் மல்லிகா சாராபாய்.

## ஸ்பீட் போஸ்டுக்கு சி.டி. பரிசு!

விரைந்து வரும் 'குஜராத் டுடே' பற்றிய முதல் இரண்டு விமர்சனங்களுக்கு, துக்ளக் ஆண்டு விழாவில் மோடி ஆற்றிய உரையின் சி.டி. பரிசு!

சென்ற வார குஜராத் டுடே குறித்த விமர்சனங்களுக்கு சி.டி. பரிசு பெறுவோர் :

**ஜே.ராஜன், வடலூர்**

**ஆர்.சுஜாதா, சென்னை**



குஜராத்தில் வாழும் இந்துக்களும் முஸ்லிம்களும் அந்த மாநிலத்தை பேதமற்று நேசிக்கிறார்கள் என்பதில் ஐயமில்லை. ஆனால், பாழாய்ப் போன வோட்டு வங்கி அரசியல் அல்லவா அவர்கள் மனங்களைப் பிளவுபடுத்துகிறது.

**குஜராத் பயணம், பார்வை, படைப்பு : ப்ரியன், எஸ்.சந்திரமௌலி**

*(பயணம் தொடரும்)*


நன்றி

ஆறு வார அதிரடி!

# பட்டுப் புடவை பரிசுத் திட்டம்!

இந்த வார போட்டியும் எளிதான். 'குஜராத் டுடே' பக்கங்களில் அடங்கியுள்ள ஒரு முக்கியமான வார்த்தையைக் கண்டுபிடித்து எழுத, அருகிலுள்ள கட்டங்களை நிரப்புங்கள். வட்டமிட்ட எழுத்துகளை வரிசைப்படுத்தி, கடைசி கட்டங்களை நிரப்புங்கள். கூப்பனையும் நிரப்பி, **'ஆறு வார அதிரடி 3' கல்கி, 47-NP, ஜவஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 032 என்ற முகவரிக்கு 02.04.08க்கு முன்னதாகக் கிடைக்கும்படி அனுப்புங்கள்.** சரியான விடையை எழுதும் ஒரு வாசகருக்கு, **பாலம் சில்க்ஸ் வழங்கும் பட்டுப்புடைவை பரிசு!** ஒன்றுக்கு மேற்பட்ட வாசகர்கள் சரியாக எழுதினால் குலுக்கல் முறைதான். ஆசிரியர் தீர்ப்பே இறுதி!

**'ஆறு வார அதிரடி - 3'**

பெயர் : ..............................

வயது : ..............................

முகவரி : ..............................

..............................

..............................

..............................

கல்கியில் விரும்புவது : ..............................

..............................

1. இவருக்கும் பூர்விகம் குஜராத்தான்.

| | | | | ◯ | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|

2. 'கிருஷ்ணாவதார காலத்தில் ........... முற்றுகையின்போது'

| | ◯ | | | | |
|---|---|---|---|---|---|

3. இரண்டு ரத்தினங்களில் ஒன்று

| | | | | ◯ | | | ◯ |
|---|---|---|---|---|---|---|---|

4. காற்றாடி நிபுணர்

| | | ◯ | | |
|---|---|---|---|---|

5. மோடியின் தொகுதி

| ◯ | | | | |
|---|---|---|---|---|

6. வானில் கடை விரிக்கும்

| ◯ | | | |
|---|---|---|---|

7. பரோடாவை ஆண்டு வந்த மகாராஜா

| ◯ | | | | |
|---|---|---|---|---|

**மோடி அரசு மீது ஆக்ரோஷமாய்க் குற்றச்சாட்டு கூறும்...**

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|

# கல்கி - பாலம் சில்க்ஸ் வழங்கும் போட்டி-3

Palam

Sri Palam Silk Sarees



# கல்கி



2008 மார்ச் 30
சர்வஜித் பங்குனி 17
மலர் : 66
இதழ் : 35

தமிழ்த்திரு
நாடுதன்னைப்
பெற்ற தாயென்று
கும்பிடடி பாப்பா
- பாரதியார்

## சலுகை பெற்றுச் சுரண்டும் சிறப்பு மண்டலங்கள்!

**சி**றப்புப் பொருளாதார மண்டலங்கள் என்ற ஏற்பாடு, ஏற்றுமதி தொழில்களை ஊக்குவித்து, அன்னியச் செலாவணியைப் பெருக்குவதற்காக உருவாயிற்று. அதிகரித்து வரும் இறக்கு மதிகளைச் சமாளிக்கவும், அன்னிய கடன்களைத் துரிதமாகக் குறைக்கவும் இந்தச் சிறப்புப் பொருளாதார மண்டலங்களுக்கு அனுமதி வழங்கப்பட்டது. அதனாலேயே இந்த மண்டலங்களுக் குள் நடத்தப்படும் தொழிலகங்களுக்கு ஏராளமான சலுகைகள் வழங்கப்பட்டும் உள்ளன. இந்த நிறுவனங்களில் நிலவும் அநீதிகளை சமீபத்தில் சுட்டிக் காட்டியிருக்கிறது நிர்வாக சீர்திருத்த கமிஷன். இதன் தலைவர் வீரப்ப மொய்லி, 'சிறப்புப் பொருளாதார மண்டலங்களுக்கான சட்டத்தை விரைந்து சீர்திருத்தவேண்டும்' என்று அறிக்கை தந்திருக்கிறார். தேவைக்கு அதிகமான அளவில் விவசாய நிலங்கள் இந்த மண்டலங்களுக்கு அள்ளித் தரப்படு வதும், காலவரையறையின்றி இந்த மண்டலத்து நிறுவனங் களுக்கு வரி விலக்கு தருவதும் பொதுப் பணத்தை வீணடிக்கும் காரியங்கள் என்பது மொய்லி தலைமையிலான கமிஷனின் அறிக்கை.

இந்த அறிக்கை, அரசியல் வட்டாரத்தில் பெரிய அளவில் கவனத்தை ஈர்க்கும் என்று எதிர்பார்க்க முடியாது. ஆனால், அதில் கூறப்பட்டுள்ளவை எவ்வளவு முக்கியமான, உடனே கவனிக்கப் படவேண்டிய அறிவுரைகள் என்பதை, மத்திய தலைமை

ஹாப்பி ஒக்கேனக்கல் ஹாலிடே ரொம்ப ஜாலியா இருக்கு...
எல்லைப்பிரச்சனை
அரசியல் ஆதாயம்




தணிக்கை ஆய்வதிகாரியின் அறிக்கை (சி.ஏ.ஜி. ரிப்போர்ட்) உணர்த்துகிறது.

இவ்வறிக்கையின் பல அம்சங்கள் மொய்லியின் வாதங்களுக்கு வலு சேர்க்கின்றன. சமீப காலமாக, சிறப்புப் பொருளாதார மண்டலங்கள், தங்கள் உற்பத்திப் பொருட்களை உள்நாட்டுச் சந்தையிலேயே விற்றுச் சம்பாதித்து வருகின்றன. இதன் மூலம் அவை லாபம் கண்டாலும், ஏற்றுமதி நிகழாததால் சிறப்பு மண்டலங்களின் நோக்கம் நிறைவேறவில்லை. இதைவிடப் பெரிய மோசடி, உள்நாட்டு விற்பனைக்கும் அவை ஏற்றுமதி சலுகைகளைக் குறைவின்றிப் பயன்படுத்தி வருகின்றன என்பதுதான்! இதனால் அரசுக்கு - அதாவது பொதுமக்களுக்கு, இரட்டை நஷ்டம்: மானியம், வரிச் சலுகை என்று ஒரு பக்கம் இழப்பு; கிடைக்கவேண்டிய அன்னியச் செலாவணி கிட்டாதது மற்றொரு இழப்பு! உதாரணமாக, நோக்கியா நிறுவனம் 4885 கோடி ரூபாய் பெறுமானமுள்ள பொருட்களை உள்ளூர்ச் சந்தையிலேயே விற்றதால், அவற்றின் ஏற்றுமதிக்கென வழங்கப்பட்ட 681 கோடி ரூபாய் சலுகை முழுதும் அரசுக்கு நஷ்டம்; டாலர் வருமானமும் நஷ்டம்.

இதனினும் கொடுமை, இந்த மண்டல நிறுவனங்கள் சில, பொய் ஆவணங்களைச் சமர்ப்பித்துச் சலுகைகளை அள்ளிக்கொண்டிருப்பதுதான். இதனால் மட்டுமே அரசுக்கு 295 கோடி ரூபாய் நஷ்டம்! முறைகேடாக கடனுதவி பெற்ற நிறுவனங்களால் 350 கோடி ரூபாய் நஷ்டம்! சேவை வரி ஒழுங்கீனத்தால் 159 கோடி இழப்பு! - இவையெல்லாம் ஒரே ஆண்டில்! இவை தவிர, இந்த மண்டலங்கள் வாயிலாக வரவேண்டிய சுங்கத் தீர்வையாக 2555 கோடி ரூபாய் பாக்கி இருக்கிறது! கூட்டிக் கழித்துப் பார்த்தால், சிறப்புப் பொருளாதார மண்டலங்களால் வரக்கூடிய ஆதாயங்களைக் காட்டிலும் இழப்பே மிக அதிகம்!

மொய்லி அறிக்கை மீது உடனடி நடவடிக்கை எடுக்காவிட்டால், சலுகை பெற்ற சிலர் மட்டும் சுரண்டிக்கொண்டிருக்க, சராசரி இந்தியன் இளிச்சவாயனாகிவிடுவான்! ●



# சுத்தம்!

இன்று முக்கிய விழா. விஞ்ஞானி வித்யாதரனுக்கு விருதளிப்பு நடக்கப் போகிறது. அந்த அவசரத்தில் இருந்தான் அருண். முக்கிய அதிகாரியான அவன்தான் விஞ்ஞானியைப் பத்திரமாக அழைத்து வந்து, விழாவை முடித்து அனுப்பி வைக்கும் வரையிலான எல்லா பணிகளுக்கும் பொறுப்பு.

அந்த நேரம் பார்த்துதானா அவன் மனைவி அவனிடம் சிக்க வேண்டும்? சாதாரணப் பிரச்னைதான். வீட்டின் கழிவறையில் ஒரு குழாய் உடைந்துவிட்டது. அதிலிருந்து சகிக்க முடியாத துர்நாற்றம் வீச, மனைவியை வார்த்தையால் குதறி எடுத்துவிட்டான் அருண்.

''வீட்டைச் சுத்தமாக வைத்துக் கொள்ளத் துப்பில்லை. உனக்கெல்லாம் வேறு என்ன வேலை? ஓர் இடத்துக்குப் புறப்படும்போது எரிச்சலைக் கிளப்பினால் இன்றைய பொழுது முழுக்க இப்படித்தான் இருக்கும். முடிந்தால் ஒழுங்காக வீட்டு வேலைகளைப் பார்த்துக் கொண்டு இரு. இல்லாவிட்டால், புறப்படு உங்கம்மா வீட்டுக்கு'' என்று ஆத்திர நெருப்பை அவள் மீது வீசியவன், வேகமாக காரை எடுத்துக் கொண்டு கிளம்பினான்.

விஞ்ஞானி வித்யாதரன் வீடு. வரவேற்பறையில் காத்திருந்தான் அருண். நீண்ட நேரமாகியும் விஞ்ஞானி புறப்படுவதற்கான அறிகுறி எதுவும் தென்படவில்லை.

''ஒரு முக்கியமான வேலையாக இருக்கிறார். முடிந்ததும் வந்துவிடுவார். உட்காருங்கள்'' என்று அவரது மனைவி சொல்லிவிட்டுப் போனார். அருண் காத்திருந்தான். இதற்குள், விழாக் குழுவினரிடமிருந்து பலமுறை ஃபோன் வந்துவிட்டது. விழாவுக்கு நேரமாயிற்று என்றும், விஞ்ஞானியின் வருகைக்காகவே அனைவரும் காத்திருக்கிறார்கள் என்றும், சீக்கிரமாக அழைத்து வருமாறும் மேலதிகாரிகள் அருணுக்கு உத்தரவிட்டனர்.

குறுக்கும் நெடுக்குமாக நடந்து கொண்டிருந்தான் அருண். மேலும் நேரம் நகர்ந்தது. மந்திரியிடமிருந்து ஃபோன் வந்தது. விஞ்ஞானியிடம் நேரடியாகப் பேச விரும்பியதால், செல்ஃபோனை விஞ்ஞானி இருந்த இடத்துக்கு எடுத்துச் சென்றான். அவர் செய்துகொண்டிருந்த வேலையைப் பார்த்ததும் மிகவும் அதிர்ந்து போனான். ஃபோனை வாங்கிப் பேசி முடித்த விஞ்ஞானி,

''என்ன, அதிர்ச்சியாக இருக்கிறதா தம்பி? என்னைப் பொருத்த வரை எல்லா வேலைகளைவிட, இந்தக் கழிவறை சுத்தம் செய்கிற வேலையை நமக்கு நாமே செய்து கொள்ள வேண்டுமென்பது எனது கொள்கை. இதை நான் சொல்லவில்லை. மகாத்மா காந்தியே சொல்லியிருக்கிறார். அடைப்பை நீக்கிவிட்டேன். புறப்படுகிறேன்'' என்று துரிதமாகக் கிளம்பியபோது...

காலையில் தான் கத்தியபோது வாடிப்போன மனைவியின் முகம் நினைவில் எழுந்து அருணை வாட்டியது.

ஓம் ஸ்ரீகுருப்யோ நம

ஓம் ஹ்ரீம் புவனேச்வர்யை நம :



# ஸத்குரு சாந்தாநந்த மஹாஸ்வாமிகளின் பக்தர்களுக்கு ஓர் அன்பான அறிவிப்பு

1. சென்னை மாநகரில் ஸத்குரு சாந்தாநந்த ஸத் ஸங்கம் என்ற பெயரில் ஓர் அறக்கட்டளை துவக்கப்பட்டுள்ளது.
2. இந்த அறக்கட்டளை தற்சமயம் புதுக்கோட்டை ஸ்ரீபுவநேச்வரீ அவதூத வித்யா பீடத்தின் பீடாதிபதியாக விளங்கி வருகின்ற ஸத்குரு ஓங்காராநந்த மஹாஸ்வாமிகளின் தலைமையின் கீழ் இயங்கி வருகின்றது.
3. தற்போது இந்த அறக்கட்டளை, நாமக்கல் அருகிலுள்ள சேந்தமங்கலத்தில் இருக்கின்ற ஸத்குரு சாந்தநந்த மஹா ஸ்வாமிகளின் குருநாதர் ஸத்குரு ஸ்வயம் ப்ரகாச மஹாஸ்வாமிகளின் அதிஷ்டான திருப்பணிகளைச் செய்து வருகின்றது. இத்திருப்பணிக்கு நன்கொடைகள் அன்புடன் வரவேற்கப்படுகின்றன. (ஜுலை மாதம் 14ஆம் நாளன்று மஹா கும்பாபிஷேகம் செய்ய திட்டமிடப்பட்டுள்ளது).
4. அறக்கட்டளை திட்டமிட்டுள்ள பணிகள் :
   * ஏழை, எளிய மாணவர்களுக்கு கல்வி உதவி முதலான சமூகப் பணிகள் செய்தல்.
   * சிறந்ததொரு நூலகம் அமைத்தல்.
   * சென்னை மாநகரின் முக்கிய பகுதி ஒன்றில் ஸத்குரு சாந்தாநந்த மஹாஸ்வாமிகளின் திருப்பெயரில் கலையரங்கம் ஒன்று உருவாக்குதல்.
   * அக்கலையரங்கத்தின் முற்பகுதியில் 18 அடி உயரத்தில் ஸத்குரு சாந்தாநந்தர் அவர்களின் திருவுருவச்சிலை நிறுவுதல்.
5. ஸ்ரீஸ்வாமிகளின் பக்தர்களை தொடர்பு கொள்வதற்காகவே இந்தத் தகவல் விளம்பரம் தரப்பட்டுள்ளது.
6. ஸத்குரு ஸ்வாமிகளுடைய பக்தர்கள் அனைவரும் ஸத்ஸங்கத்தில் தங்களை உறுப்பினர்களாக இணைத்துக்கொண்டு, அறக்கட்டளையின் அறப்பணிகளில் தங்களை ஈடுபடுத்தி குருவருள் பெற பேரன்புடன் அழைக்கின்றோம்.

இப்படிக்கு

**ஸத்குரு பூஜ்யஸ்ரீ ஓங்காராநந்த மஹாஸ்வாமிகளின்**

அருளாணைப்படி

**ஸத்குரு சாந்தாநந்த ஸத்ஸங்கம்**

**'சபரி ஸாதனா'** 142, முதல்மாடி, கிரீன்வேஸ் ரோடு, ராஜா அண்ணாமலைபுரம்,

சென்னை - 600 028. ☎ **+91-44-2464 1600 / 98400 51131**



# தங்கம் வென்ற தங்கங்கள்



மதுரை மாவட்டம் திருமங்கலத்தி லிருந்து நான்காவது கிலோ மீட்டரில் இருக்கிறது 'டெடி' உயர்நிலைப் பள்ளி. தென்னிந்தியாவிலேயே மனநலம் பாதிக் கப்பட்ட குழந்தைகளை சராசரி குழந்தை களோடு சேர்த்து பாடம் நடத்துவது இங்கு மட்டும்தான். 1992ஆம் வருடத்தில் 'அமண்டா மர்ஃபி' என்னும் அயர்லாந்து நாட்டுப் பெண்மணியால், மசாஜ் கட்டை கள் தயாரிக்கும் தொழிற்கூடமாக வெறும் இரண்டு பேரை மட்டும் வைத்துத் துவக் கப்பட்ட நிறுவனம், இன்று இரண்டாயிரம் பேருக்கும் மேல் வேலை செய்யும் அள வுக்கு வளர்ந்துள்ளது. இந்த ஊழியர்களின் குழந்தைகளுக்காக 1994ஆம் வருடத்தில் தான் இப்பள்ளி துவக்கப்பட்டது. அதோடு நிறுவனத்தின் தொழிலாளர்களுக்கான இல வச மருத்துவமனை, வாகன ஓட்டுநர்கள் மற்றும் பாலியல் தொழிலாளர்கள் மத்தி யில் எய்ட்ஸ் விழிப்புணர்வு என இந் நிறுவனத்தின் சேவை, மாவட்டம் முழுக்க விரிந்து பரவியுள்ளது.

''1997வது வருஷத்தில் இருந்து இங்கே சிறப்புக் குழந்தைகளுக்கான 'கேர் சென்டர்' நடந்துட்டு இருக்குங்க. இங்க இருக்கற 53 குழந்தைகளில் ஒவ்வொருவரும் ஒவ்வொருவிதமான பிரச்னையால பாதிக்கப்பட்டவங்க. உதாரணமா இந்த வஸந்த், மோனிஷா, ஆட்டிஸம்ங் கற பிரச்னையால பாதிக்கப்பட்ட வங்க. ஹரிகிருஷ்ணன், லக்ஷ்மி தேவி மாதிரியானவங்க எம்.ஆர்.ங்கற கொஞ் சம் சீரியஸான பிரச்னையால பாதிக் கப்பட்டவங்க. ஆட்டிஸம் இருக்கற பசங் களை ரொம்பக் கவனமா பாத்துக்கணும். அவங்களால எதிலேயும் கான்ஸன்ட்ரேட் பண்ண முடியாது. சின்னச் சின்ன விஷ யங்கள்கூட அவங்களை டிஸ்டர்ப் பண் ணும்'' என்கிறார் 'டெடி கேர் சென்டர்' ஒருங்கிணைப்பாளர், திருமதி கண்ணகி.

மாநில அளவிலான ஸ்பெஷல் ஒலிம் பிக்கில், 3 தங்கம், 3 வெள்ளி, 3 வெண்கலம் வென்ற இந்த மாணவர்களின் சாதனைப் பட்டியல் நீளமானது. உரையாடலுக் கிடையில் அந்தக் குழந்தைகள் நம் முடன் கை குலுக்குவதும், குட்மார்னிங் சொல்வதுமாய், உற்சாகத்துடன் வலம் வந்தார்கள். இது ஒரு புறமென்றால், மாலை ஆறு மணிக்கு மேல் சுற்றியுள்ள கிராமங்களில் படிக்க முடியாமல் கஷ் டப்படுகிற சிறுவர்களைத் தேடி அழைத்து வந்து, மாலை நேரப் பள்ளியும் நடத்து கிறார்கள்.

**- லக்ஷ்மி சரவணக்குமார்**

# புத்தக விமர்சனம்










## காதல் சொட்டும் கவிமொழி!

**இரும்பு உள்ளம் படைத்தவர்கள் - வீர் சங்வி; தமிழாக்கம்: லயன் எம்.சீனிவாசன், கண்ணதாசன் பதிப்பகம், 23, கண்ணதாசன் சாலை, தியாகராய நகர், சென்னை - 17. விலை ரூ.70**

நந்தன் நீலேகானி, விஜய் மல்லையா, ரத்தன் டாடா உள்பட பதினொரு பெரும் பிசினஸ் தலைவர்களுடனான நேர் காணல்களின் தொகுப்பு. 'ஹிந்துஸ்தான் டைம்ஸ்' வீர் சங்வியின் இத்தொகுப்பைத் தமிழில் மொழிபெயர்த்துள்ளார் லயன் எம்.சீனிவாசன். வழக்கமான பிசினஸ் முதல்வர்களின் லாப, நஷ்ட விகிதங்கள், வியாபாரத்தின் இதர புள்ளி விவரங்கள் என்றில்லாமல், பத்திரிகையாளர்களுடன் அவர்கள் பொதுவாகப் பகிர்ந்து கொள்ளாத விவரங்களை வெளிக்கொணர்ந்துள்ளார் நூலாசிரியர்.

**கட்டிகளின் கோவில் விசிட் - பிரபுசங்கர், விகடன் பிரசுரம், 757, அண்ணாசாலை, சென்னை - 02. விலை ரூ.40**

கோயில்களில் எதைச் செய்ய வேண்டும், எதைச் செய்யக் கூடாது போன்ற விவரங்களுடன், சில தெய்வங்களின் வரலாறுகள், ஆன்மிகக் கதைகள் என சிறுவர்களுக்கான தகவல்களை அளித்துள்ளார் பிரபுசங்கர். இப்புத்தகத்தைப் படிக்கும்போது, குழந்தைகளோடு குழந்தையாகி தாத்தாவின் கைபிடித்து, கோயிலை வலம் வந்த உணர்வு இயல்பாகத் தோன்றுகிறது.

**உணராத உண்மைகள் - மு.ரா.சத்யா, சுபயோக பதிப்பகம், பிளாட் எண். 3, சுபயோக சுப இல்லம், பத்மாவதி அவென்யூ, திருமலை நகர் அனெக்ஸ், பெருங்குடி, சென்னை - 96. விலை ரூ.100**

வாழ்வில் நம் ஒவ்வொருவருக்கும் தோன்றும் கேள்விகளுக்கான ஒவ்வொரு விதமான பதில்களில், உண்மை எது? அதை உணர்வது எப்படி? என்ற, நாம் உணராத உண்மைகளை வெளிச்சம் போட்டுக் காட்டுகிறார் ஆசிரியர். அறிவியல், ஆன்மிகச் சிந்தனைகளோடு குட்டிக் கதைகள் மூலம், மனங்களை ஆராய்ந்து உண்மைகளை விவரிக்கிறார். அறிந்த உண்மைகளை உணர்ந்து நடந்தால், வாழ்வே ஆனந்தம்தான் என்பதை வலியுறுத்துகிறார் சத்யா.

**பொல்லாத பேரழகி - த. கண்ணன், குமரன் பதிப்பகம், 19, கண்ணதாசன் சாலை, தி.நகர், சென்னை - 17. விலை ரூ.60**

மனக்கடலில் அமிழ்ந்து கிடக்கும் காதல் எரிமலையின் உணர்ச்சிக் கொந்தளிப்பால், பொங்கி எழுந்துள்ள கவிக்கனமி! தன் பெயருக்கேற்ப, இதயம் உருகி காதல் மொழி சொட்ட, கவிதைகளைப் படைத்துள்ளார் கண்ணன். அழகிய புகைப்படங்கள், பொல்லாத பேரழகிக்கு மேலும் மெருகூட்டுகின்றன.

– மித்ரா

**மா**லை மயங்கிய நேரம். யதார்த்தமாய்த் தன் வீட்டின் முன் நின்றிருந்தார் சுப்பிரமணி. 'சர்'ரென்று 'பைக்'கில் வந்து இறங்கினான், கருணா.

''தாத்தா, எனக்கு அவசரமா ஆயிரம் ரூபா வேணும். நீங்கதான் கொடுத்து உதவணும். நாலஞ்சு நாள்ல நானே திருப்பிக் கொண்டாந்து தந்துடறேன். எப்படியாவது நீங்க கொடுக்கணும்.''

கொடுக்க வசதி இருக்கிறது. அது தெரிந்துதான் கருணா கேட்கிறான்.

கேட்காதவன் கேட்கிறான். கொடுத்துதான் ஆக வேண்டும். ஆனால், தற்போது பத்து இருபதைத் தவிர, ஆயிரம் ரூபாய் சுப்பிரமணியிடம் இல்லையே! அதை அவர் கருணாவிடம் சொல்ல முடியாதே! சொன்னாலும் அவன் கட்டாயம் நம்பமாட்டான்.

சுப்பிரமணியின் இரண்டு பையன்கள் வெளிநாட்டில் சம்பாதிக்கிறார்கள். அப்பன், ஆயிக்கு அடங்கின பிள்ளைகள். மாதந் தவறாமல் பணம் அனுப்பிக்கொண்டிருக்கிறார்கள். இது கருணாவுக்கும் தெரியும். அவனிடத்தில், தன்னிடம் பணம் இல்லையென்று சொல்ல முடியுமா சுப்பிரமணி?

உள்ளூர் ஐ.ஓ.பி. வங்கியில் பணம் இருக்கிறது. அதுவும் அவர் மனைவி பேரில்! இவரைவிட அந்தம்மா படித்தவர். அவர் பேரில் வங்கியில் பணம் போட்டார்கள். இது மகன்களின் ஏற்பாடு.

''இங்கே இரு'' என்று கருணாவிடம் சொல்லிவிட்டுக் கிளம்பினார்.

**இ**ரண்டு தெருக்களைக் கடந்து சுப்பிரமணி, கமலா வீட்டுக்குப் போய்ச் சேர்ந்தார். நல்ல காலமாய் அப்போது கமலா வீட்டில் இருந்தாள்.

கமலாவின் கணவன் பத்மநாபன் என்கிற பத்மனும் நாலு வருஷங்கள் குவைத்தில் சம்பாதித்துவிட்டு, போன மாதம்தான் ஊருக்குத் திரும்பியிருந்தான்.

''வாங்கப்பா... வாங்க...!''

''வர்றேம்மா! எங்கே பத்மன் இல்லியா?''

''இல்லப்பா''

''எனக்குக் கைமாத்தா ஒரு ஆயிரம் ரூபா அவசரமா உடனே தேவை. அதான் உங்கிட்ட வந்தேன்.''

கமலா, சுப்பிரமணியிடம் இரண்டு



அ.சி.மணியன்

ஐந்நூறு ரூபாய் நோட்டுகளைத் தந்தான்.

''அம்மாடி, நாளைக்குப் பொழுதுக்குள்ளே இந்த ஆயிரத்தையும் கொண்டுவந்து தந்திடறேன்ம்மா!''

**சு**ப்பிரமணித் தாத்தா ஓசையில்லாமல் கருணாவிடம் ஆயிரம் ரூபாயையும் கொடுத்தார்.

முக்கியமாய் அவர் மனைவிக்குத் தெரியக் கூடாதே!

ஆயிரத்தை வாங்கிக்கொண்டதும், பாட்டியிடம் சொல்லிக்கொள்ளக்கூட மறந்து, அங்கிருந்து ஒரே உதையில் தன் இரு சக்கர வண்டியைக் கிளப்பிக் கொண்டு பறந்தான் கருணா!



**ம**றுநாள் விழித்து, காலை வேலையெல்லாம் முடித்து வெகு நேரம் கழித்துதான் அவருக்கு அறிவு விழித்தது.

'நாலஞ்சு நாள் கழிச்சு நானே திருப்பிக் கொண்டு வந்து தருகிறேன்' என்று சொல்லித்தான் கருணா பணம் கேட்டான். அதற்குச் சம்மதிப்பதுபோல, அப்போது எதுவும் மறுத்துப் பேசவில்லை சுப்பிரமணி.

ஆனால், மறுநாளே தான் திரும்பக் கொண்டு வந்து தந்து விடுவதாகச் சொல்லித்தானே அவர் கமலாவிடம் பணம் வாங்கி வந்தார்.

'கமலாவுக்கு நான் சொல்லியபடி இன்றே கொண்டு கொடுப்பதுதான் நாணயம்' என்ற முடிவுக்கு வந்தார் சுப்பிரமணி. தெரிந்த ஒருவரிடம் ஆயிரம் ரூபாய் வாங்கிக் கொண்டு வந்தார்.

கமலா வீட்டில் இல்லை. அவள் கணவன் பத்மன்தான் இருந்தான்.

''கமலா எங்க மாப்ளே?''

''அவளப் பத்திதான் மாமா, உங்களப் பார்க்க வரணும்ன்னு கிளம்பினேன். ஒரு சின்ன சண்டை. நானும் கோபத்துல ரெண்டு தட்டு தட்டிட்டேன்.''

# ஆயிரம் ரூபாய்!

''என்ன மாப்பிள்ளே, இப்படிச் சொல்றீங்க? கமலா நல்ல பொண்ணாச்சே!''

''ஏற்கெனவே நாலஞ்சு பேருக்கு ஆயிரம் ஆயிரமா வாங்கிக் கொடுத்துட்டு ஏமாந்துட்டா. பணம் போயிடுச்சு! இப்ப யாருக்குடி ஆயிரம் கொடுத்தேன்னு கேட்டா, 'யாரா இருந்தா உங்களுக்கென்ன... நாலு வருஷமா ஒண்டியா கெடந்து தவிச்ச எனக்கு உதவி

செஞ்சவங்களுக்கு நானும் ஓர் உதவி செய்ய வேண்டாமா'ன்னு சொல்லிட்டு, கடைசி வரை யாருக்கு ஆயிரம் கொடுத்ததுன்னு சொல்லாம சாதிச்சுட்டா!''

சுப்பிரமணிக்குச் சுருக்கென்றது.

எல்லாம் தன்னால்தானா... அந்த ஆயிரம் ரூபாயால் வந்த விளைதானா?

மடியில் ஆயிரம் ரூபாய் கனத்தது. இந்தச் சூழ்நிலையில் இதை பத்மனிடம் இவர் கொடுப்பது சரியா? சரியில்லை.

''வாங்க, ரெண்டு பேருமே மாயவரம் போவோம். கமலாவை அழைச்சுக்கிட்டு வந்துடலாம். அதான் நல்லது. கௌரவம்!''

''நாம போய் அழைச்சுக்கிட்டு வரக் கூடாது. அவளுக்கு இன்னும் கொழுப்பு ஏறிடும்!'' மறுத்துவிட்டான் பத்மன்.



**கா**லை ஏழு மணி.

அதிரடியாய் ஓர் அம்பாசிடர் கார், சுப்பிரமணி வீட்டு முன் வந்து நின்றது.

காருக்குள் உட்கார்ந்தபடியே இறங்கி வராமல், ''மணி அண்ணே... மணி அண்ணே...! சட்டையப் போட்டுக்கிட்டு உடனே கிளம்பி வாங்க! அவசரம்... நாம ஓர் இடத்துக்குப் போயிட்டு உடனே வந்திடுவோம் வாங்க... நானே திரும்ப உங்கள கார்லேயே கொண்டு வந்து வீட்ல விட்டுர்றேன். உடனே கிளம்பி வாங்க!'' உள்ளூர் ஊராட்சி மன்றத் தலைவர் பிரேமநாதன் சத்தம் போட்டார்.

சுப்பிரமணி எதிர்பார்த்தபடி, கார் ஓடி மாயவரம் போய் பத்மனின் மாமனார் வீட்டின் முன் போய் நின்றது.

கமலாவின் அம்மாவும், அப்பா உலகநாதனும் முகம் மலர்ந்து எல்லோரையும் வரவேற்றார்கள்.

உள்ளே இருந்து மெல்ல வந்து நின்றாள் கமலா.

''ஏம்மா கமலா, இது உனக்கே நல்லா இருக்கா? அவன்தான் கோபத்துல முட்டாள்தனமா நடந்துட்டான். அதுக்காக நீ இங்கே ஓடி வரணுமா? உன் அப்பா, அம்மா வருத்தப்படணுமா? அங்கே உன் சொந்தக்காரன், நான் இல்லே! நீ உயிருக்கு உயிரா பழகற சுப்பிரமணி அண்ணன் இல்லே! எங்ககிட்ட நீ சொல்லியிருந்தா பிரச்னை காதும் காதும் வச்ச மாதிரி அங்கேயே உன் வீட்டுக்குள்ளேயே தீர்ந்திருக்குமே!

***

''என்னுடைய திருமணச் செலவு என்ன ஆகும்?''

''இப்போதைக்கு 150 ரூபாய்தான். பிறகு ஆயுள் முழுவதுக்கும் மாதா மாதம் உன் சம்பளம்.''

- கல்கிராணி

***

சரி... சரி... இனிமே வேற பேச்சே இல்லே! நீ உடனே கிளம்பு. நம்ம ஊருக்குப் போவோம்...''

**ப**த்மனும் கமலாவும் தங்கள் வீட்டில் இறங்கிக்கொண்டார்கள்.

கார் சுப்பிரமணி வீட்டின் முன் நின்றது.

சுப்பிரமணி காரை விட்டு இறங்கும் முன், அவரிடம் பத்து நூறு ரூபாய் நோட்டுகளை நீட்டினார் தலைவர் பிரேமநாதன்.

''இதெல்லாம் பத்மனோட மாமனார் ஏற்பாடு. போக்குவரத்து செலவுக்குன்னு அவர் கொடுத்ததை நீங்க வைச்சுக்குங்க...''

சுப்பிரமணிக்குப் பணத்தைத் தீண்டவே பிடிக்கவில்லை. மறுத்துவிட்டு, கருணாவைத் தேடிப் போனார். ●

ஸ்ரீ ராமஜெயம்



# ஸ்ரீ மாருதி டிராவல்ஸ்

2A, II Floor Mathura Enclave - No.95/123, Perambur High Road, Perambur, Chennai - 11

**Ph 25511786** மொபைல் போன் : **9444035876**

(நாமசங்கீர்த்தனத்துடன் அன்பர்களை அழைத்துச் செல்லும் ஆன்மிகச் சுற்றுலா குழு அமைப்பாளர்கள்)

① 13.6.08 - 24.06.08 11 நாட்கள் அடங்கிய டீலக்ஸ் டூர் **சிங்கப்பூர், மலேசியா, பேங்காக் (பட்டாயா)**

② 12.7.08 - 16.07.08 4 நாட்கள் கொண்ட **மந்த்ராலய ஸ்ரீ ராகவேந்திரர், ஆனேகுந்தி நவபிருந்தாவனம்** மற்றும் **பிச்சாலயா, கல்லூர் மஹாலக்ஷ்மி, விருபாக்ஷி (ஹம்பி)** - சென்னை - மந்திராலயம் - சென்னை இரயில் பயணம். இதர இடங்களுக்கு மினி பஸ் மூலமாக பயணம் - கட்டணம் ரூ. 1800/- சாப்பாடு அவரவருடையது.

③ 21.7.08 - 26.07.08 5 நாட்கள் கொண்ட **சோழ நாடு திவ்ய தேசங்கள் (40 பெருமாள் கோவில்கள் மட்டுமே)** மினி டீலக்ஸ் பஸ் மூலமாக பயணம் - இரவு தங்குதல் சாப்பாடு உட்பட அனைத்து கட்டணம் ரூ. 2850/-

④ 2.8.08 - 9.08.08 7 நாட்கள் கொண்ட **மதுரை பாண்டிய நாடு, திருநெல்வேலி நவதிருப்பதிகள்** மற்றும் **ராமேஸ்வரம், நவபாஷாணம், திருப்புல்லாணி** - சென்னை - மதுரை - சென்னை இரயில் பயணம். இதர இடங்களுக்கு மினி பஸ் மூலமாக பயணம். இரயில், பஸ், உணவு பொதுவாக இரவு தங்குமிடம் உட்பட அனைத்து கட்டணம் ரூ.3800/-

⑤ 19.8.08 - 25.08.08 6 நாட்கள் கொண்ட **கேரள தேசத்து மலைநாட்டு திருப்பதிகள்** மற்றும் **திருநெல்வேலி நவதிருப்பதிகள்** - சென்னை - திருநெல்வேலி - சென்னை இரயில் பயணம். இதர இடங்களுக்கு 52 இருக்கைகள் கொண்ட பஸ் பயணம், இரவு தங்குதல், சாப்பாடு உட்பட அனைத்து கட்டணம் ரூ.3450/-

⑥ 10.9.08 - 24.09.08 15 நாட்கள் கொண்ட **பத்ரிநாத், கேதார்நாத் யாத்திரை** அனைத்து கட்டணம் ரூ.7100/-

⑦ 11.10.08 - 22.10.08 12 நாட்கள் கொண்ட **காசி, கயா, அயோத்தியா, நைமி சாரண்யம்** அனைத்து கட்டணம் ரூ.5750/-

⑧ 19.04.2008, 26.04.2008, 03.05.2008 ஒரு நாள் சுற்றுலா பயணம். கட்டணம் ரூ.350/-



**பங்கு பெறுவீர்!**
பாக்கியவான்களாவீர்!

மேற்படி யாத்திரையின் கட்டணம் மற்றும் விவரம் அறிய சுய விலாசமிட்ட ரூ. 5/- ஸ்டாம்ப் கவருடன் விண்ணப்பிக்கவும். மாருதி யாத்திரை பக்தியுடன் பகவத் அனுக்கிரஹத்தைப் பெறுவதற்கே. இருந்த சௌகர்யத்திற்கும் வசதிக்கும் அல்ல

**V. சீனிவாசன்**
(அமைப்பாளர்)

**Visit our Website: www.srimaruthitravels.com** E.mail: vsrinivasan1952@yahoo.com

---

SRI

# S.S.M. RESIDENCY

**A Township with calm and serene Atmosphere**

**For Senior Citizens and Sickly Disabled**



- For the Elite with clean habits
- To enjoy Twilight of life with peace, honour, dignity and security
- Luxurious living with pure vegetarian balanced diet
- Medical block exclusively for sickly / disabled - all age Groups
- Round the clock Medical Care and Nursing
- Care unto the last with love and affection

## SRIMATHI SUNDARAVALLI MEMORIAL RESIDENCY

(Managed by SSME Trust, Chennai - 600 044)

Moppedu Road, Alapakkam, New Perungalathur, Chennai - 600 063.

**Phone : 044 - 22792003, 22792141**

E-mail : ssmeto@dataone.in Website : www.ssmhome.org

# தேய்மானம் தவிர்!

எனக்கு வயது முப்பத்தாறு. என்னால் வலது தோளை உயரத் தூக்க முடியவில்லை. தலை வாரக் கூடச் சிரமமாக இருக்கிறது. இரவில் தோள் அதிகமாக வலிக்கிறது. அந்தத் தோளை அதிகம் பயன்படுத்திவிட்டதனால்தான் இந்த நிலையா? இதற்கு ஃபிசியோதெரபி பலனளிக்குமா?

- நீரார், செங்கோட்டை



**ஃபிசியோதெரபிஸ்ட் டாக்டர் லட்சுமணன் அளிக்கும் விளக்கம்:**

''எந்த மூட்டையுமே அதிகம் பயன்படுத்தினால் வலி ஏற்படாது. சொல்லப்போனால், இயக்காமல் இருந்தால்தான் சிக்கல்கள் ஏற்படலாம். தோள் மூட்டைச் சுற்றியுள்ள பகுதியை பெரி-ஆர்டிகுலர் ஸ்ட்ரக்சர் என்போம். அங்கு தேய்மானம் ஏற்பட்டிருந்தால் காலப்போக்கில் தினசரி செயல்களைச் செய்வதில்கூடச் சிக்கல் ஏற்படலாம். நீங்கள் நீரிழிவு நோய்க்காரராகவோ, நிறைய எழுதித் தள்ளும் எழுத்தாளராகவோ, தினமும் கணினியின் முன் அதிக நேரம் வேலை செய்பவராகவோ இருந்தால், இந்நிலை இருக்க வாய்ப்பு உண்டு. இப்படிப்பட்டவர்களுக்குத்தான் முப்பத்தைந்து வயதிலேயே தோளில் தேய்மானம் உண்டாக வாய்ப்பு அதிகம்.

பகலில் பிற வேலைகளில் கவனம் செல்வதால் தோள்வலி அதிகமாகத் தெரிவதில்லை. இரவில் படுத்திருக்கும் போது வலி ஏற்பட்டால் அது பெரிதாகத் தெரிகிறது.

உங்கள் தோளில் ஏற்பட்ட பாதிப்பு

### தூறல்

**சா**லைகளோரம்
மரங்களை வளர்த்தது
முடியாட்சி.
வளர்ந்த எல்லாவற்றையும்
மக்களாட்சியில்
வெட்டியாச்சி!

- வீ.விஷ்ணுகுமார்



# ப்ரிஸ்கிரிப்ஷன்

எந்த அளவு என்பதைக் கணித்தபிறகு மெழுகு சிகிச்சை, ஐ.எஃப்.டி. (Interferential therapy), ஐஸ் சிகிச்சை போன்றவற்றில் உரிய முறையைப் பயன்படுத்திக் குணப்படுத்துவோம்.''



**ஈறில் வலி உண்டானால், அங்கு புளியில் கொஞ்சம் உப்பை வைத்துச் சிறிது நேரம் அழுத்தி வைத்திருந்தால் வலியும் வீக்கமும் சரியாகிவிடும் என்கிறார்களே, உண்மையா?**

**- கே.என்.பாலகிருஷ்ணன், சென்னை**

**பல்மருத்துவர் டாக்டர் என்.வி. ஆறுமுகம் அவர்களின் விளக்கம்:**

''உப்புநீரில் வாயை நன்கு கொப்பளிப்பதில் தவறில்லை. சுமார் அரை நிமிடத்துக்கு இப்படிச் செய்தால் அதில் குணம் தெரிய வாய்ப்பு உண்டு. ஆனால், உப்பை ஈறுப்பகுதியில் அழுத்தி வைத்திருந்தால் சதையில் புண் வரக்கூடும் புளியினால் இதில் எந்தப் பலனும் இருப்பதாகத் தெரியவில்லை. இப்போதெல்லாம் பல் மற்றும் ஈறுகளில் உள்ள தற்காலிக வலியைப் போக்க, பலன் மிக்க வாய்கொப்பளிக்கும் மருந்துகள் அறிமுகமாகிவிட்டன. டாக்டரின் ஆலோசனைக்குப் பின், இவற்றைப் பயன்படுத்துவதே பாதுகாப்பானது.''

**- ஜி.எஸ்.எஸ்.**



லட்சுமணன்



என்.வி.ஆறுமுகம்

# "நான் நந்திதா தாஸ் இல்லை!"

சிறந்த நடிகை என்று சர்வதேச விருது கூட வாங்கியாகிவிட்டது. ஆகவே நந்திதா தாஸ் போல நடிப்புக்குச் சவால்விடும் கதா பாத்திரங்களில் மட்டும் நடித்தால் நீண்ட நாள் நீடிக்கலாமே என்றால், பிடிவாதமாக மறுக்கிறார் ப்ரியா மணி. "இங்கே ஒரே மாதிரி கேரக்டர்கள்ல நடிச்சா அப்புறம் அதுக்குத்தான் லாயக்குனு முத்திரை குத்திடு வாங்க. நான் நந்திதாதாஸ் இல்லை. என்னால கிளாமரும் பண்ண முடியும்னு நிரூபிக்கவேண்டிய கட்டாயத்துல இருக்கேன். மலைக்கோட்டை, தோட்டா படங்கள் என் ஆசையைப் பூர்த்தி செஞ்சிருக்கு. நடிகைன்னா எல்லாவிதமான கதாபாத்திரங்களிலேயும் நடிக்கணும். அதைத்தான் இப்போ நான் செஞ்சுட்டு வர்றேன். ஆனா, இன்னைக்கும் பெரிய கம்பெனிகள் என்னை நடிக்கக் கூப்பிடலை. விஜய், அஜீத், விக்ரம், சூர்யா போன்ற பெரிய நடிகர்களோட படங்கள்ல நடிக்கறதுக்கான வாய்ப்பும் இன்னைக்கு வரைக்கும் வரலை. இந்த நாலு பேரோட நடிச்சாதான் மீடியாவும் நம்மைப் பத்தி பரபரப்பா எழுதுவாங்க. அதனால நான் இந்த நாலு நடிகர்களோட நடிக்கற வாய்ப்புக்காகக் காத்துக்கிட்டு இருக்கேன்" என்று அதிரடியாகத் தொழில் ரகசியத்தைப் போட்டுடைக்கிறார்!



வெற்றிகரமாக ஓடிய படம், பருத்தி வீரன். அந்தப் படத்தின் இயக்குனர் அமீரோடு கார்த்தியும் ப்ரியாமணியும் சண்டை போட்டுக்கொண்டதாக செய்திகள் வந்ததே என்றால், அதைப் பற்றி விரிவாகப் பேச மறுக்கிறார். "அவர் சொன்னதுக்கு நான் பதில் சொன்னேன். அவ்வளவுதான். நாளைக்கே அவர் மறுபடியும் நடிக்கக் கூப்பிட்டா, கட்டாயமா நடிக்கப்போவேன்" என்றவர் இறுதியாக, "தமிழ் சினிமாவுல கதாநாயகிகளுக்கு முக்கியத்துவம் உள்ள படங்கள் ரொம்பக் கம்மி. அதனால் இயக்குனர்கள்தான் ஒரு நடிகையோட தலையெழுத்தைத் தீர்மானிக்கிறாங்க. நாங்க நல்ல படங்கள்ல நடிக்கறது நல்ல இயக்குனர்கள் கையிலதான் இருக்கு."

- செந்தில்

# ''யூ ஆர் அப்பாயின்டெட்''

''யூ ஆர் அப்பாயின்டெட்'' என்ற வாக்கியம் வேலை தேடும் இளைஞனுக்கு 'டானிக்' வாசகம். இந்த வாக்கியத்தை இப்போது அடிக்கடி கேட்க முடிகிறது. காரணம், வளாக நேர்காணல் எனும் கேம்பஸ் இன்டர்வியூ!


* கோ.பார்த்தசாரதி

திருச்சி பாரதிதாசன் பல்கலைக் கழகத்தின் ஐ.ஈ.சி.டி. மையம் இதுவரை பதினைந்து கேம்பஸ் இன்டர்வியூக்களை நடத்தியுள்ளது. ''இதன்மூலம் இப்பல்கலைக் கழக எல்லைக்கு உட்பட்ட திருச்சி, தஞ்சாவூர், திருவாரூர், நாகப்பட்டினம், பெரம்பலூர், அரியலூர், கரூர், புதுக்கோட்டை ஆகிய எட்டு மாவட்ட மாணவர்களில் பலருக்குப் பயன் கிடைத்துள்ளது'' என்கிறார் இம்மையத்தின் இயக்குனர், பேராசிரியர் கோ.பார்த்தசாரதி.

பொறியியல் கல்லூரி மாணவர்களுக்கு மட்டும் தான் கேம்பஸ் இன்டர்வியூ என்ற நிலை மாறி, கலை, அறிவியல் பாடம் படிப்பவர்களுக்கும் இந்த வாய்ப்பு தற்போது கிடைத்து வருகிறது. மல்டி நேஷனல் கம்பெனிகளின் வருகை, வேலைவாய்ப்புக்கான கதவினை, 'திறந்திடு சீசேம்' என்கிறது.

''ஒவ்வொரு கம்பெனியின் தேர்வு முறையும் மாறுபடுகிறது'' என்கிறார்.

நுழைவுத் தகுதித் தேர்வு, குழு விவாதம், நேர் காணல், பணி நியமன ஆணை என்ற வரிசையில் சில நிறுவனங்களின் ஆட்தேர்வு அமைகிறது. இவை அனைத்துமே ஓரிரு நாட்களிலே நடத்தி முடிக்கப்பட்டு, முடிவு உடனே அறிவிக்கப்பட்டுவிடும் என்பது தான் இங்கு குறிப்பிடத்தக்க விஷயம்.

''சில நிறுவனங்கள் நுழைவுத் தேர்வை நடத்துவதில்லை'' எனக்கூறும் பேராசிரியர் பார்த்தசாரதி, ''மாணவர்களின் மதிப்பெண்களை வைத்து, அதனடிப்



படையில் தகுதியானவர்கள் அழைக்கப் படுகின்றனர். நேர்காணலுக்கு முன்பு தங்கள் நிறுவனம் பற்றியும், தங்களின் தேவை குறித்தும் எல்.சி.டி. மூலம் விளக்கிச் சொல்கின்றனர்'' என்கிறார்.

பெரிய சாஃப்ட்வேர் நிறுவனங்கள், முதல் வகுப்பில் தேர்ச்சி பெற்றிருப் பவர்களை மட்டுமே நேர்காணலுக்கு அழைக்கின்றன. ஆன்லைனில் தேர்வை வைத்துவிட்டு, பின்னர் நேர்காணலுக்கு அழைக்கும் நிறுவனங்களும் உண்டு.

பி.பி.ஓ., கால்செண்டர்களில் பணி யாற்ற தற்போது ஆட்கள் அதிகம் தேவைப்படுகின்றனர். கேம்பஸ் இன்டர் வியூ மூலம் அதிகமாக இப்பணிகளுக் குத் தேர்வு செய்யப்படுகின்றனர்.

சாஃப்ட்வேர் நிறுவனங்களுக்கு வழக்கம்போல் பணியாளர்கள் தேவை இருக்கிறது. சேல்ஸ், மார்க்கெட்டிங்கில் எண்ணற்ற வேலைவாய்ப்புகள் குவிந்து கிடக்கின்றன. அதற்கு அடுத்தபடியாக, வங்கிகள் திறன் வாய்ந்த நபர்களைத் தேடிப்பிடிக்கிறது. தனியார் கல்லூரிகள், தங்களுக்கு வேண்டிய விரிவுரையாளர் களை கேம்பஸ் இன்டர்வியூ மூலம் தேர்ந்தெடுக்கின்றன.

'உருப்படியாக ஒரு வேலை கிடைக் காதா' என்று நினைத்துக்கொண்டிருப் பவர்களுக்கு, சில நேரம் கேம்பஸ் இன்டர்வியூ மூலம் ஒன்றுக்கும் மேற்பட்ட வேலைகள் கிடைத்துவிடுகின்றன.

## 10 கட்டளைகள்!

1. பயோடேட்டாவை பளிச்சிட வை!
2. பாஸிடிவ் மனத்தோடு பதில் சொல்!
3. சவால்களால் சளைத்திடாதே!
4. சொல்வன திருந்தச் சொல்!
5. கம்ப்யூட்டரில் லேட்டஸ்ட் கற்றறி!
6. குழு விவாதத்தில் கலக்கப் பழகு!
7. தலைமை ஏற்கக் தயாராகு!
8. குழு உணர்வு கைவிடேல்!
9. நேர நிர்வாகம் நிரம்ப பலன்தரும்!
10. லேட்டஸ்டாய் இரு; லேட்டாய்ப் போகாதே!

இது ஒருபுறமிருக்க, கேம்பஸில் தேர்வா காத மாணவர்களின் மனநிலையோ கவலைக் கிடமாகிறது. காரணம், நமது கல்வி முறைதான். காலி இடங்கள் காலியாகவே இருக்க, தகுதியும் திறனுமிக்க நபர்கள் இல்லை என்கின்றன சில நிறு வனங்கள்!

- எம்.திரவியம் முருகன்



21

"சுஜாதாவின் மறைவு தனிப்பட்ட முறையில் எனக்கு ஒரு பேரிழப்பு: ஓர் அருமை நண்பரை இழந்துவிட்டேன்" என்று நான் கூறுவதில் அர்த்தமில்லை; ஏனென்றால், அவரை அறிந்தவர்கள் அனைவருமே இதே வார்த்தைகளைக் கூறக்கூடும்!

'கல்கி' வீட்டுக் கல்யாணம் என்று என் மூத்த மகள் திருமணம் பற்றி, அவர் சாவி பத்திரிகையில் எழுதினார். ஒரு கல்யாணத்தைப் பற்றி எழுதப்பட்ட கட்டுரை அது ஒன்றாகத்தான் இருக்க முடியும் என்பதோடு, அதையும் சுவாரஸ்யமாக எழுத முடியும் என்று நிரூபித்தார். சாவி, சுஜாதா இருவருக்குமே 'கல்கி' அவர்களிடம் இருந்த பெருமதிப்புக்கு இது எடுத்துக்காட்டு.

'கல்கி' அவர்களுக்குப் பிறகு, தமிழ் கூறும் நல்லுலகமெங்கும் மிகப் பிரபலமாக விளங்கிய ஓர் எழுத்தாளர் சுஜாதாதான் என்று தைரியமாகக் கூறலாம். அவரது எழுத்தைப் படிப்பதில் தமிழ் மக்கள் அவ்வளவு ஆர்வம் காட்டினார்கள். தமக்கே உரியதான ஒரு தனி நடையை அவர் உருவாக்கினார். வார்த்தைகளில் அவர் காட்டிய சிக்கனம், நடையில் விறுவிறுப்பு ஏற்றியது.

'கல்கி' அவர்கள் இன்னும் சில ஆண்டுகள் வாழ்ந்திருந்தால், அவர் காலத்துக்கு ஏற்ப சரித்திரக் கதைகளிலிருந்து விஞ்ஞானக் கதைகளுக்கு 'டிராக்' மாறியிருப்பார் என்பதும் அந்தக் குறையை சுஜாதா தீர்த்து வைத்தார் என்பதும் என் கருத்து. இதை ஒரு சமயம் சுஜாதாவிடமே நான் குறிப்பிட்டபோது, " 'கல்கி' விஞ்ஞானக் கதை எழுதவில்லை என்று எப்படி முடிவுக்கு வந்தீர்கள்?" என்று திருப்பிக் கேட்டார். நான் கேள்விக்குறியுடன் அவரைப் பார்க்க, " 'மோகினித் தீவு', 'சோலைமலை இளவரசி' ஆகியவற்றில் காலத் தத்துவம் தெரிகிறதே; விஞ்ஞானக் கதைகளின் தொடக்கமே அதுதானே" என்றார்! சுஜாதாவுக்கு 'கல்கி'யின் எழுத்து எந்த அளவுக்கு ஊக்கமளித்திருக்கிறது என்பதை அப்போது உணர்ந்தேன்.

கல்கி பத்திரிகைக்கு சுஜாதா எழுதி அனுப்பும் கதை, கட்டுரைகளை அல்லது அத்தியாயங்களைப் பார்க்க, எனக்கு 'கல்கி' அவர்கள், தமது கையெழுத்து பற்றிக் கூறியதுதான் நினைவு வரும். "ஆரம்பத்தில் என் கையெழுத்து எல்லோருக்கும் புரியும்படி மிக அழகாக இருந்தது. பத்திரிகைத் துறையில் ஏராளமாக எழுதிக் குவிக்க வேண்டியிருந்ததால், போகப் போக என் கையெழுத்து எனக்கும் அச்சுக் கோக்கும் கம்பாஸிட்டருக்கும் கடவுளுக்கும்



# குறிஞ்சி மலரும்

மட்டுமே புரியும் என்ற நிலை உருவா யிற்று. கொஞ்ச காலத்துக்குப் பிறகு கட வுள், 'எப்படியாவது உன் கையெழுத்தைப் படித்துப் புரிந்துகொள்ள வேண்டும் என் பது என் தலையெழுத்தா என்ன?' என்று கேட்டு, படிப்பதை நிறுத்திவிட்டார்! அதன்பிறகு எனக்கும் கம்பாஸிடருக்கும் மட்டுமே என் கையெழுத்து புரிந் தது. சமீப காலமாக கம்பாஸிட ருக்கு மட்டுமே புரிகிறது; அவர் வாழ்க!'' சுஜாதாவின் கையெழுத்தோ சுபஸ்ய

செல்ஃபோனிலும் தமிழில் எஸ்.எம்.எஸ். அனுப்பு மளவுக்கு உயர்ந்திருக்கிறது.

கால் புள்ளி, முற்றுப்புள்ளி, கேள்விக்குறி முதலானவற்றை உப யோகிக்க அவருக்கு நேரமிருந்த

## 70 முதல் 7 வரை



* அமரர் கல்கி நினைவும் சிறுகதைப் போட்டி நடுவராக சுஜாதா - கல்கி ராஜேந்திரன்

# பாரிஜாதமும்...

தில்லை. சில வாக்கியங்களை முடிக்காமல் அந்தரத்தில் விட்டுவிடுவார். ''நீங்க பார்த்து சரி பண்ணிக்குங்க'' என்று கூறிவிடுவார்.

சில ஆங்கில வார்த்தைகளைத் தமி ழில் எழுதியிருந்தால் மட்டும் அதன் கீழேயே பென்சிலில் அதை ஆங் கிலத்திலும் எழுதுவார். 'எடிட்' செய்யும்போது ஏதாவது சுதப்பிவிடப் போகிறோமே என்ற கவலை!

சீக்கிரம் கம்பாஸிடருக்குக் கூடப் புரியாமல் போயிருக்கக்கூடும்!

நல்லவேளையாக கம்ப்யூட்டர் வந்தது. தமிழில் கீ-இன் பண்ணும் வசதியும் ஏற்பட்டது. கம்ப்யூட்டரில் கதை எழுதி பிரின்ட்-அவுட் எடுத்து அனுப்பிய முதல் தமிழ் எழுத்தாளர் சுஜாதாதான். அந்த ஆரம்ப நாட்களில் இதற்காக அவர் எடுத் துக்கொண்ட பிரயாசையும் பங்களித்த அறி வியலும்தான், இன்று அபார வளர்ச்சியுற்று

ஒரு சமயம், 'திகில் சிறப்பிதழ்' தயாரிக்குமாறு அவரைக் கேட்டுக் கொண்டேன். 'வாங்களேன், பேச லாம்' என்றார். பெங்களூர் சென்று இரண்டு நாள் அவர் இல்லத் திலேயே தங்கியிருந்தேன். நிஜ

**கல்கி ராஜேந்திரன்**

சுஜாதாவின் விருந்தோம்பலை அனுபவித்தேன். ரங்கராஜனோ ஏராள ஐடியாக்களை உதிர்த்து என்னைத் திக்குமுக்காடச் செய்தார். குற்றவியலில் (Forensic Science) அவருக்கு இருந்த அறிவு புலனாயிற்று. அதில் வியப்பில்லை. ஆனால், கிரைம் தொடர்பான நகைச்சுவை துணுக்குகளை ஏராளமாகக் குவித்து, திக் திக் சிறப்பிதழை பக பக சிரிப்பிதழாகவும் மாற்ற முடியும் என்று நிரூபித்தாரே, அது நான் எதிர்பாராதது. ஆங்கில திகில் நாடகம் ஒன்றைத் தமிழாக்கம் செய்து தந்தார். கூடவே, 'இதை யாரேனும் நடிக்கச் செய்து புகைப்படம் எடுத்து பிரசுரித்தால் நன்றாயிருக்கும்" என்று யோசனை கூறினார். அதன்படி, திரு.கே.பாலசந்தர் டைரக்ஷனில் லக்ஷ்மி அவர்கள் நடிக்க, யோகா படம் பிடித்துத் தந்தார். சுஜாதாவின் திரையுலகப் பிரவேசம் அன்றே கல்கி வாயிலாக நடந்தேறியது!

இவ்வளவு சொன்ன பிறகு இன்னொன்றைக் கூறுவதில் தப்பில்லை. கல்கி பத்திரிகைக்கு ஆரம்ப எழுத்தாளர் சுஜாதா எழுதி அனுப்பிய முதல் கதையைத் திருப்பி அனுப்பிய 'பெருமை' எனக்குண்டு! அதற்கான காரணத்தையும் விளக்கி கடிதம் எழுதியிருந்தேன். இதற்காக அவர் கொஞ்சமும் வருத்தப்படவில்லை என்பதும், என்றுமே கல்கிக்கு எழுதுவதைத் தவிர்க்க முற்பட்டதில்லை என்பதும் சுஜாதாவின் பெருந்தன்மை.

அமரர் 'கல்கி' அவர்களுக்குப் பிறகு கல்கியில் எழுதி சிறப்பித்து, சிறப்படைந்த எழுத்தாளர்களில் திரு.நா.பார்த்தசாரதி தனித்தன்மை வாய்ந்தவர். கல்கி பத்திரிகை நடத்திய 'மாதச் சிறுகதைப் போட்டி'யில், ரூ.100/- (!) பரிசு பெற்ற 'வலம்புரிச் சங்கு' மூலம் கல்கி வாசகர்களுக்கு அவர் அறிமுகமானார். சில தினங்கள் சென்று ஆசிரியர் சதாசிவம், எம்.எஸ். அவர்களின் கச்சேரி நிமித்தம் மதுரை சென்றிருந்த போது அவரை நா.பா. சந்தித்துப் பேசினார். கல்கி பத்திரிகை மேலும் மேன்மையுற சில யோசனைகளைக் கூறினார். திறமையைக் கண்ட இடத்தில் எடை போடும் ஆற்றல் மிக்க சதாசிவம், 'சென்னைக்கு வந்து நீங்களே உங்கள் யோசனைகளை அரங்கேற்றுங்களேன்' என்று வரவேற்பு சொல்லிவிட்டார். கல்கி பத்திரிகையில் 'குறிஞ்சி மலர்', 'பொன் விலங்கு' நாவல்களை நா.பா. எழுதியபோது, இதுவரை அனுபவித்தறியாத புதுமையான கதாபாத்திரப் படைப்புகளை வாசகர்கள் உணர்ந்து நல்லாதரவு அளித்தார்கள். ஆர்வத்துடன் பேசப்பட்ட நாவல்களாக அவை அமைந்தன.



● நா.பா. - அசாதாரண தன்னம்பிக்கை

நா.பா. எழுதியதோடு நில்லாமல், வேறு பலரை கல்கியில் எழுத வைத்தது பத்திரிகைக்கு மற்றுமொரு திருப்பு முனையாக அமைந்தது. அதுவரை, வந்த கதைகளை கவனமுடன் படித்து ஏற்புடையனவற்றைப் பிரசுரித்து வந்தோம். ஆனால், எழுத்தாளர்களைச் சந்தித்து, கேட்டு வாங்கிப் பிரசுரிக்க வேண்டும் என்று தோன்றியதில்லை. இது விஷயத்தில் 'கல்கி' அவர்களின் வழிகாட்டலை மறந்துவிட்டிருந்தோம். நா.பா. வந்த பிறகு, தி.ஜானகிராமன், ஜெயகாந்தன், லா.சா.ராமாம்ருதம் போன்ற பல இலக்கியத்தரமான எழுத்தாளர்களை கல்கியில் எழுத வைத்தார். இதன் மூலம் கல்கியின் கௌரவமும் அந்த எழுத்தாளர்களின்

பெருமையும் மேலும் உயர்ந்தன.

**நா**.பா.வுக்கு அசாதாரணமான தன்னம்பிக்கை உண்டு. அதனால் தைரியமும் அவரிடம் குறைவின்றி குடிகொண்டிருந்தது. இவை அவரது தோரணையிலும் பேச்சிலும் எப்போதும் வெளிப்பட்டன. எதையும் விமர்சிக்கத் தயங்கவே மாட்டார். என்னுடைய எழுத்தையும் அவர் என்னிடமே கடுமையாக விமர்சித்தது உண்டு. 'பாத்திரப் படைப்புகளில் எழுத்தாளர் ஒவ்வொருவருக்கும் ஒரு மனோதர்மம் இருக்கும். அதன்படிதான் அமையும்; என்றாலும், உங்கள் விமர்சன உரிமையை நான் மறுக்கவில்லை; விமர்சனத்தை ஏற்காவிட்டாலும் அந்த உரிமையை மதிக்கிறேன்'' என்றேன். அரசியல் குறிப்புகள் எழுத 'தீரன்' என்ற புனை பெயரை அவர் தேர்ந்தெடுத்ததில் வியப்பில்லை.

**அ**வர் எழுத்து மணி மணியாக இருக்கும். ஓர் அத்தியாயம் எழுத ஆரம்பித்தால், நிறுத்தாமல் தொடரும் போடும் வரை அவர் பேனா இயங்கிக் கொண்டே இருக்கும். அடித்தல் திருத்தலே இருக்காது. காகிதத்தின் வலது ஓர விளிம்பு வரை எழுதுவார். அங்கு வார்த்தை உடைவது பற்றிக் கவலைப்படமாட்டார். நன்றாகச் சிந்தித்த பிறகு எழுதுவாரே தவிர, எழுத ஆரம்பித்த பிறகு நிறுத்தி அல்லது நிதானித்து சிந்திக்கமாட்டார். விடையை நன்கறிந்த மாணவன் விருவிருவென்று பரீட்சையில் விடை எழுதுவது போல எழுதிக்கொண்டு போவார்!

அவருடைய எழுத்தில் யாரும் கை வைக்கக் கூடாது; வார்த்தைக்கு வார்த்தை அவர் எழுதியவாறே அச்சாக வேண்டும் என்பதில் பிடிவாதம் காண்பிப்பார். ஒரு சமயம் அவருடைய தொடர்கதை குறிப்பிட்ட பக்கங்களில் அடங்காமல் நீண்டு விட்டது. ''பத்து வரி அடிக்க வேண்டும்; நீங்கள் குறைத்துத் தருகிறீர்களா அல்லது நானே குறைத்துக் கொள்ளவா?'' என்று கேட்டேன். ''ஐயோ! அடிக்கணுமா! பத்து வரியா!'' என்று அதிர்ச்சி அடைந்தார். ஏதோ படுகொலைக்கு நான் தயாராகிவிட்டது போல என்னைப் பார்த்தார். சற்று யோசித்து, ''தொடர்ச்சி 56ஆம் பக்கம் என்பது போலப் போட்டு, அதிகமாயிருக்கும் வரிகளை அந்தப் பக்கத்தில் பிரசுரித்து விடுங்களேன்'' என்றார். ''அப்படிச் செய்வது வழக்கமில்லை; காலம் மாறிவிட்டது'' என்றேன்.



● கே.பாலசந்தர் டைரக்‌ஷனில் லக்ஷ்மி நடித்த சுஜாதாவின் ஆங்கில திகில் நாடகம்

''அப்படியானால் ஒன்று செய்யுங்கள்; பத்து வரிகளை தனியே ஒரு காகிதத்தில் அச்சடித்து, இந்தப் பக்கத்தின் அடியில் ஒட்டி மடித்துக் கொடுத்து விடுங்கள்! வாசகர்கள் பிரித்துப் படித்துக் கொள்ளட்டும்!'' என்றார். அவரைச் சம்மதிக்க வைப்பது பெரும் பாடாகிவிட்டது.

தமது எழுத்தில் நா.பா.வுக்கு அவ்வளவு ஆழமான நம்பிக்கை!

**(பேசுவோம்)**

1991ஆம் ஆண்டில் கல்தான் அஷ்லான் ஷா ஹாக்கிப் போட்டியை இந்தியா வென்றது. இன்றைக்கும் இந்திய ஹாக்கியின் சாதனைகளில் ஒன்றாக நினைவுகூரப்படுகிறது. அப்போது ஒரு சம்பவம் நடந்தது. போட்டியை வென்ற மறுநாள், இந்திய ஹாக்கி ஃபெடரேஷனின் தலைவரிடம், 'அணியின் வெற்றிக்குப் பாடுபட்ட வீரர்களுக்கு என்ன சன்மானம் வழங்கப் போகிறீர்கள்?' என்று கேட்கப்பட்டது. 'என்னது சன்மானமா? அவர்களுக்கு விமான டிக்கெட், தங்கும் வசதி எல்லாம் அளிக்கப்பட்டது. வேறென்ன வேண்டுமாம்?' என்று முகத்தில் அடித்தாற்போல பதிலளித்தார் அவர் (இத்தனைக்கும் அவர் சொன்ன இரு வசதிகளையும் தனியார் அமைப்புகள் இந்திய அணிக்கு வழங்கியிருந்தன). இப்படிப்பட்ட சிந்தனாவாதிகளை மேலிடத்தில் அமர்த்தியதால்தான், இன்றைக்கு இந்திய ஹாக்கியை ஆளாளுக்குப் பந்தாடிக் கொண்டிருக்கிறார்கள்.

இந்தியாவுக்கு ஒலிம்பிக்கில் எட்டு தங்கங்கள் வாங்கிக் கொடுத்த பின்பும் தேசத்தில் ஏன் ஹாக்கி களையிழந்து போனது? காரணம் - வீரர்களை மதிக்காத ஓர் அமைப்பு அதன் தலைவிதியை எழுதிக்கொண்டிருப்பதுதான்.



வாழ்வாங்கு வாழ்ந்த ஹாக்கியின் பரிதாப நிலையைக் கேளீர். ஐந்து நட்சத்திர விடுதிகளைத் தவிர வேறெங்கும் இந்தியக் கிரிக்கெட் வீரர்களைத் தங்க வைக்க முடியாது. நடிகைகளுடனான நட்புவரைக்கும் சினிமாவின் உச்சநட்சத்திரம் அனுபவிக்கும், அத்தனை சகல வசதிகளும் கிரிக்கெட் வீரர்களுக்கும் சாத்தியமாகின்றன. ஆனால், சினிமாவில் இரண்டாம் நிலை நடிகர்கள் அனுபவிக்கும் வசதிகள்கூட ஹாக்கி வீரர்களுக்குக் கிடைப்பதில்லை. போட்டி நடக்கும் மைதானத்திலேயே அவர்களுக்கு அறைகள் ஒதுக்கப்படும். நாற்பது நாட்கள் நடக்கும் ஐ.பி.எல். போட்டிக்காக, இந்தியக் கிரிக்கெட் நட்சத்திரம் டோனிக்கு ஆறரை கோடி ரூபாய் வழங்கப்படுகிறது. ஒருநாள் போட்டி ஒன்றில் விளையாடினால் கிரிக்கெட் வீரருக்கு ஒன்றரை லட்சம் சம்பளம். ஹாக்கி வீரர்களுக்கு ஆயிரம் ரூபாய்க்கு மேல் நயாபைசா கிடைக்காது. இதற்கே அடிக்கடி சொற்களால் குத்திக்காட்டுவார்கள். 'ஆட்டத்துக்குச் சம்பளம் கேட்டால் அது லஞ்சமல்லவா' என்று, ஒரு முறை அரிய விளக்கம் கொடுத்தார் இன்றைய ஹாக்கி ஃபெடரேஷன் தலைவரான கில். ஆனால், அவருடைய டெலிஃபோன் பில்லுக்காக வருடத்துக்கு ஏழரை லட்சம் செலவழிக்கப்படுகிறது!

பி.சி.சி.ஐ நிர்வாகம் தலைசிறந்தது என்று கூறமுடியாது. ஆனாலும், இந்தியக் கிரிக்கெட்டில் ஓர் அடிப்படை ஒழுங்கு இருக்கிறது. சச்சினுக்குக் கொடுக்கப்பட்ட கௌரவம், இந்திய ஹாக்கியின் ஒரே பிரபலமான தன்ராஜ் பிள்ளைக்கு இறுதி வரை வழங்கப்படவேயில்லை. 'என் மகனை ஒருபோதும் ஹாக்கி ஆட அனுமதிக்கமாட்டேன்' என்று சொல்லும் அளவுக்கு அவர் காயப்பட்டுக் கிடக்கிறார்.

இத்தனை களேபரங்களுக்கு

மத்தியிலும், 'இந்திய ஹாக்கியை நிமிர்த்தாமல் நான் ஓயமாட்டேன்' என்று சூளுரைக்கிறார் கில்.

இவரைப் போன்ற ஒருவருக்கு, ஏன் விளையாட்டுத்துறை அமைச்சரான மணி சங்கர் அய்யர் ஆதரவளிக்கிறார் என்று எல்லோரும் விசனப்படுகிறார்கள். என்ன நடந்தாலும் வீரர்கள்தான் தூக்கியடிக்கப் படுவார்கள், அதிகார பீடத்தை மாற்ற முடியாது என்கிற போக்கு இந்திய ஹாக்கியில் உள்ளது.

கிரிக்கெட் அணிக்கு யுவராஜ் சிங் வந்த அதே சமயத்தில் ஜுகராஜ் சிங் என்கிற இளம் வீரர் ஹாக்கி அணிக்குக் கிடைத்தார். ஆரம்பத்திலேயே அற்புதமாக ஆட ஆரம்பித்தார். 'பெனால்டி கார்னர்களுக்கு இந்தியர்கள் லாயக்கில்லை' என்கிற நீண்ட நாள் பழியை அவர் துடைத்தெடுத்தார். ஆனால், 2003ஆம் வருடம் பலமான விபத்து ஒன்றில் சிக்கி, படுக்கையில் கிடத்தப்பட்டார் ஜுகராஜ் சிங். 2005க்குப் பிறகு, நான் தயார் என்று அவர் கைதூக்கினார். ஆனால், இன்றுவரைக்கும் அவரை யாரும் கண்டுகொள்ளவில்லை. இப்படித்தான் பல திறமைகளை இடது கையால் தள்ளிவிட்டிருக்கிறது ஹாக்கி ஃபெடரேஷன். ●

# பந்தாடப்படும் ஹாக்கி!



# நடக்குமென்பார்; நடக்கும்!

**23.3.2008 முதல் 29.3.2008 வரை**

தஞ்சை பரத்வாஜ்



**மேஷம் :** மன தைரியமும், தன்னம்பிக்கையும் நிறைந்த வாரம் இது. பண வரவு இருக்கும். கல்வியால் பெருமை வந்து சேரும். கணவன்-மனைவிக்குள் இருந்த கருத்து வேற்றுமைகள் நீங்கும். உடல் ஆரோக்கியம் நல்ல நிலையில் இருந்து வரும். வியாபாரத்தில் நல்ல ஏற்றம் இருக்கும். வேலையில்லாதவர்களுக்கு வேலை அமையும்.



**ரிஷபம் :** நீங்கள் அக்கறையுடன் செயல்பட வேண்டிய வாரம். பரீட்சைக்குப் படிக்கும் மாணவர்கள் கவனமாக பொறுப்பாக நடந்துகொள்ள வேண்டும். பணிபுரிபவர்களுக்கு வேலையில் சில சங்கடங்கள் எழக்கூடும். சிலருக்கு இடமாற்றம் ஏற்படவும் வாய்ப்புண்டு. முடிந்த வரை எச்சரிக்கையுடன் இருக்கவும். ராகு/கேது/சனி வழிபாடு உங்களை நல்வழிப்படுத்தும்.



**மிதுனம் :** இது உங்களுக்கு சந்தோஷமான வாரம். பொருளாதாரத்தில் இது நாள் வரை இருந்து வந்த கஷ்டம் இனி இருக்காது. வீடு மற்றும் வீட்டு உபயோகப் பொருள்கள் வாங்கி மகிழ்வீர்கள். நண்பர்கள் வீடு தேடி வந்து உதவி புரிவார்கள். செய்தொழில் விருத்தியாகும். புண்ணிய ஸ்தலங்களுக்குச் சென்று வரும் வாய்ப்பு ஏற்படும். பரிகாரம் தேவையில்லை.



**கடகம் :** செலவுகள் அதிகமாகும் வாரம். எதிலும் கவனமுடன் செயல்படுவது நல்லது. நன்மை செய்தாலும் தீமையாகவே முடியும். யாருக்கும் ஜாமீன் போட வேண்டாம். உத்தியோகத்தில் வேலைப்பளு அதிகரித்து சக ஊழியரால் தொந்தரவுகள் அதிகமாகும். திருமணப் பேச்சுகள் தடைப்படும். ராகு/கேது/சனி வழிபாடு செய்தால் நன்மை பெறலாம்.



**சிம்மம் :** மனசஞ்சலம் தீரும் வாரம். எதிலும் தீர ஆலோசித்து முடிவு எடுப்பது நல்லது. திருமணக் காரியம் நிறைவேறும். குடும்ப வாழ்வில் அனுசரணை தேவை. உத்தியோகத்தில் உயர்வு உண்டாகும். உடல் ஆரோக்கியம் பாதிக்காது. வீடு/மனை வாங்க நல்ல தருணம். ராகு/கேது/சனி வழிபாடு செய்து வர, நற்பலன் உண்டாகும்.



**கன்னி :** மன பிரம்மை தீரும் வாரம். வேலையில் நற்பெயர் உண்டாகும். கணவன் மனைவி உறவு நன்றாக இருக்கும். படிப்பில் முன்னேற்றம் ஏற்படும். தூரதேச பிரயாணம் செல்ல நேரிடும். வழக்கு வெற்றி அளிக்கும். கொடுக்கல் வாங்கல் நன்றாக இருக்கும். அனாவசிய செலவுகள் இருக்காது. குரு/சனி வழிபாடு செய்து வர, சங்கடங்கள் தீரும்.

ஏறின
விலைவாசி எப்போ
இறங்கும்னு ஜோசியம்
சொல்வீங்களா
பரத்வாஜ் சார்...?





**துலாம் :** பூமி மூலம் ஆதாயம் ஏற்படும் வாரம். புதிய தொழில் முயற்சி பலன் அளிக்கும். நெருங்கிய நண்பர்கள் விலகிப் போவார்கள். உடன்பிறந்தவர்களால் அனுகூலம் ஏற்படும். சுபகாரியம் நிறைவேறும். வழக்கு வெற்றி பெறும். செலவுகள் சுபமானதாக இருக்கும். நாணயம் காப்பாற்றப்படும். ராகு/கேது/குரு/வழிபாடு செய்து வர, நற்பலன் உண்டாகும்.



**விருச்சிகம் :** மகிழ்ச்சிகரமான வாரம். திருமண முயற்சி பலன் அளிக்கும். வீடு/மனை வாங்க உகந்த நேரம். கல்விவளம் மேன்மை பெறும். நண்பர்/உறவினர்களால் அனுகூலம் ஏற்படும். வழக்கு வெற்றி அளிக்கும். வேலையில் முன்னேற்றம் ஏற்படும். வேலைப் பளு அதிகரிக்கும். ராகு/கேது/சனி வழிபாடு செய்து வர, நற்பலன் கிட்டும்!



**தனுசு :** புண்ணியஸ்தலம் செல்லும் வாரம். மகான் தரிசனம் கிட்டும். கல்வியில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். தெய்வத்தால் ஆத்ம பலம் பெருகும். வெளிநாடு செல்லும் யோகம் வந்து சேரும். புதிய வேலை வாய்ப்பு தேடி வரும். வீடு/மனை வாங்க நல்ல காலம். வராத நிலுவைகள் வந்து சேரும். குரு வழிபாடு செய்து வர, சங்கடங்கள் தீரும்.



**மகரம் :** எதிலும் கவனமுடன் செயல்பட வேண்டிய வாரம். முயற்சிக்கும் காரியத்தில் தடை வந்து சேரும். கூட்டாளிகளுடன் கருத்து வேற்றுமை வந்து உருவாகும். குடும்ப வாழ்வில் விட்டுக் கொடுத்து அனுசரித்துப் போவது நற்பலனை அளிக் கும். ராகு/கேது/குரு/சனி கிரஹ வழிபாடு சங்கடங்களைப் போக்கும்.



**கும்பம் :** மனக் குழப்பம் தீரும் வாரம். வராத பாக்கிகள் வந்து சேரும். திருமண முயற்சி கைகூடும். வேலையில் நற்பெயர் கிட்டும். உடல் ஆரோக்கியம் சீராகும். நண்பர்/உறவினர்களால் ஆதாயம் ஏற்படும். புதிய வேலை வாய்ப்புத் தேடி வரும். கல்வி வளம் மேலோங்கும். வழக்கு வெற்றி அளிக்கும். ராகு/கேது/சனி வழிபாடு செய்து வர, நற்பலன் உண்டாகும்.



**மீனம் :** எதிரி தொல்லை விலகும் வாரம். மன சந்தோஷம் ஏற்படும். நீண்ட கால வழக்கு வெற்றி பெறும். கணவன், மனைவி உறவு நன்றாக இருக்கும். உடல் ஆரோக்கியம் பாதிக்காது. நண்பர்/உறவினர்களால் ஆதாயம் கிட்டும். கடன் சுமை குறையும். வீடு/மனை வாங்க நல்ல காலம். குரு வழிபாடு செய்துவர, நற்பலன் உண்டாகும்.

# 27. புதையல்

கிளைகள் நெருங்கிப் படர்ந்து நிழலால் இருண்டிருந்த மாந்தோப்புக்குள் பொன்னன் முன்னால் செல்ல, விக்கிரமன் தொடர்ந்து சென்றான். போகும்போதே தாழ்ந்திருந்த மரக்கிளைகளை பொன்னன் அண்ணாந்து பார்த்துக்கொண்டு போனான். ஒரு மரத்தினடியில் வந்ததும் நின்று மேலே உற்றுப் பார்த்தான். அந்த அடிக் கிளையின் பட்டையில் சிறு கத்தியினால் ஓர் உருவம் செதுக்கப்பட்டிருந்தது. நன்றாக உற்றுப் பார்த்தால், அது ஒரு புலியின் உருவம் என்று தெரிந்துகொள்ளலாம்.

பொன்னன் அதைப் பார்த்துவிட்டு நின்றான். அந்தப் புலி உருவத்துக்கடியில் தரையில் கிடந்த மாஞ் சருகுகளையெல்லாம் ஒதுக்கினான். பிறகு, அங்கே தரையைத் தோண்டத் தொடங்கினான்.

விக்கிரமன் பரபரப்புடன் தானும் மண்வெட்டியை எடுத்தபோது பொன்னன் கைமறித்து, ''மகாராஜா! தங்களுக்கு உடம்பு இன்னும் சரியாகவில்லை. இன்னும் எவ்வளவோ வேலைகள் செய்வதற்கு இருக்கின்றன. சற்று நேரம் மரத்தடியில் சும்மா உட்கார்ந்திருக்க வேண்டும்'' என்றான்.

அவ்விதமே விக்கிரமன் மரத்தடிக்குச் சென்று வேரின் மேல் உட்கார்ந்தான். அவனுடைய உள்ளத்தில் எத்தனையோ எண்ணங்கள் அலை அலையாக எழுந்தன. குழந்தைப் பருவத்தில் இந்த வசந்தத் தீவில் எவ்வளவு ஆனந்தமாக நாட்கள் கழிந்தன! இதே இடத்தில் ஒரு அன்னியப் பெண்ணின் தயவில் தங்க வேண்டிய காலமும் வந்ததல்லவா? நல்லவேளை, இன்றோடு அந்த அவமானம் தீர்ந்துவிடும். பெட்டியை எடுத்துக்கொண்டு உடனே கிளம்பிவிட வேண்டியதுதான்... இனிமேல் ஒரு விநாடி நேரமும் இங்கே தங்கக் கூடாது... செண்பகத் தீவிலிருந்தபோது இந்தத் தாய் நாட்டைப் பார்க்க வேணுமென்று தனக்கு ஏற்பட்டிருந்த ஆவலையும், இப்போது இங்கிருந்து கிளம்பினால் போதுமென்று இருப்பதை



# பார்த்திபன் கனவு

## அமரர் கல்கி

யும் நினைத்தபோது விக்கிரமனுக்குச் சிரிப்பு வந்தது. 'இங்கே எதற்காக வந்தோம்? என்ன பைத்தியக்காரத்தனம்?' என்று தோன்றியது. பார்த்திப மகாராஜா சுதந்திரமாக ஆண்ட அந்தச் சோழ நாடு அல்ல இது. பல்லவ சக்கரவர்த்தியின் ஆதிக்கத்தில் மிதிபட்டுக் கிடக்கும் நாடு. தேசத் துரோகியும் குலத்துரோகியும் கோழையுமான மாரப்ப பூபதியைச் சேனாதிபதியாகப் பெற்றிருக்கும் நாடு. இப்படிப்பட்ட நாட்டின் மண்ணை உதறிவிட்டு எவ்வளவு சீக்கிரத்தில் போகிறோமோ, அவ்வளவுக்கு நல்லது!

'நாடு என்ன செய்யும்? - மனுஷ்யர்கள் கெடுகெட்டுப் போயிருந்தால்?' என்ற எண்ணம் தோன்றியதும் விக்கிரமன் பெருமூச்சு விட்டான். பார்த்திப மகாராஜா போருக்குக் கிளம்புவதற்கு முன் தன்னைச் சித்திர மண்டபத்துக்குள் அழைத்துக் கொண்டு போய், அவருடைய கனவுச் சித்திரங்களையெல்லாம் காட்டியதை நினைத்துக்கொண்டான். அந்தக் கனவு நிறைவேறப் போகிறதா? இல்லை கனவாகத்தான் போய்விடுமா..? இங்கே எல்லோரும் பல்லவ சக்கரவர்த்தியின் புகழிலேயே மூழ்கிக் கிடக்கிறார்கள். நேற்றுத்தான் காஞ்சியிலிருந்து ஓர் ஆள் வந்தான். சீன தேசத்திலிருந்து வந்த ஒரு தூதனுக்கு காஞ்சியில் நடந்த வரவேற்பு வைபவங்களைப் பற்றியெல்லாம் அவன் வர்ணித்தான். விக்கிரமன் கேட்டுக்கொண்டிருந்தான். கேட்கக் கேட்க அவனுக்கு ஆத்திரம் பொங்கிக்கொண்டு வந்தது. அந்தச் சீன தேசத்துத் தூதன் தான் போகுமிடங்களிலெல்லாம் பல்லவ சக்கரவர்த்தியின் அருமை பெருமைகளைப் பற்றிச் சொல்லிக்கொண்டு போவான். சீன தேசத்திலும் போய்ச் சொல்வான். சோழ நாட்டைப் பற்றியோ, சோழ நாட்டின் சுதந்திரத்துக்காக வீரப் போர் புரிந்து மரணமடைந்த பார்த்திப மகாராஜாவின் பெயரையோ யார் கேட்கப் போகிறார்கள்...?

“மகாராஜா!” என்ற குரலைக் கேட்டு விக்கிரமன் திடுக்கிட்டு எழுந்தான். குழியில் நின்ற பொன்னன் குனிந்தான். அவன் மறுபடி நிமிர்ந்தபோது அவனுடைய கைகளில் கெட்டியான தோலினால் சுற்றப்பட்ட பெட்டி இருந்தது. பொன்னன் அந்தத் தோலை எடுத்தெறிந்தான். பழைய ஆயுதப் பெட்டி - சித்திர வேலைப்பாடமைந்த பெட்டி காணப்பட்டது.

விக்கிரமன் விரைந்து சென்று கையை நீட்டி அந்தப் பெட்டியை ஆவலுடன் வாங்கித் திறந்தான். உள்ளே .சிறிதும் மலினமடையாமலிருந்த ஓலைச் சுவடியைக் கண்ணில் ஒற்றிக் கொண்டு பெட்டிக்



குள் வைத்தான். பிறகு பட்டாக் கத்தியைக் கையில் எடுத்துக் கொண்டான். பொன்னனைப் பார்த்துச் சொன்னான்:

''பொன்னா! சற்று முன்னால் என் மனத்தில் தகாத கோழை எண்ணங்கள் எல்லாம் உண்டாயின. இந்தச் சோழ நாட்டின் மேலேயே வெறுப்பு உண்டாயிற்று. 'இந்த நாட்டுக்கு விமோசனம் ஏது? எப்போதும் பல்லவர்களின் கீழ் அடிமைப்பட்டி ருக்க வேண்டியதுதான்!' என்று எண்ணினேன். 'எதற்காக இவ்வளவு அபாயங்களுக்குத் துணிந்து, இவ்வளவு கஷ்டப்பட்டு இங்கு வந்தோம்?' என்று நினைத்தேன். அந்த மயக்கம், மாயை எல்லாம் இந்தக் கத்தியைக் கண்டவுடன் மாயமாய்ப் போய் விட்டது. பொன்னா! இந்தக் கத்தி ஒரு காலத்தில் உலகை ஆண்டது. கரிகால சோழரும் நெடுமுடிக் கிள்ளியும் இந்தக் கத்தியினால் கடல்களுக்கப் பாலுள்ள தேசங்களையெல்லாம் வென்று, சோழ மகாராஜ்யத்தை ஸ்தாபித்தார்கள். கரிகால சக்கர வர்த்தியின் காலத்தில் செண்பகத் தீவில் குடியேறிய தமிழர்களின் சந்ததிகள்தான் அந்தத் தீவில் இன்று வசிக்கிறார்கள். அத்தகைய மகாவீர புருஷர் களுடைய சந்ததியில் பிறந்தவன் நான். அவர்கள் கையில் பிடித்த வீரவாள் இது. அவர்களால் முடிந்த காரியம் என்னால் ஏன் முடியாது? பொன்னா! இந்தக் கத்தியுடனே என் தந்தை எனக்களித்த





இந்தத் தமிழ்மறை என்ன சொல்கிறது? 'முயற்சி திருவினை யாக்கும்!' ஆகா! அந்தப் புனித வாக்கைக் கூட அல்லவா மறந்து விட்டேன்! இந்தச் சோழ நாட்டுக்கு இப்போது என்னவோ நேர்ந்துவிட்டது. இங்கே அடிக்கும் காற்றே மனச் சோர்வு தருகிறது. இங்கே இனி ஒரு கணம்கூட நிற்க மாட்டேன். வா, போகலாம்!''

இவ்விதம் விக்கிரமன் பேசிக்கொண்டிருந்தபோது, பொன்னன் அவனுடைய முகத்தைப் பார்த்தவண்ணமே பிரமித்து நின்றான். அப்போது விக்கிரமனுடைய முகத்தில் சுடர்விட்டுப் பிரகாசித்த வீர தேஜஸ் அவ்விதம் அவனைப் பிரமிக்கச் செய்தது.

பிறகு சட்டென்று அந்தப் பிரமையிலிருந்து நீங்கினவனாய், மளமளவென்று மண்ணைத் தள்ளிக் குழியை மூடினான். அந்த இடத்தின் மேல் மாஞ் சருகுகளைப் பரப்பிய பிறகு, இருவரும் காவேரியை நோக்கி விரைந்து சென்றார்கள்.

நதிக்கரையை அடைந்து படகு கட்டியிருந்த இடத்தைப் பார்த்ததும் அவர்களுக்குப் பகீர் என்றது.

''இதென்ன, பொன்னா! படகு எங்கே?'' என்றான் விக்கிரமன்.

''ஒருவேளை இடம் மாறி வந்துவிட்டோமோ?'' என்று பொன்னன் திகைப்புடன் கூறி, அங்குமிங்கும் நோக்கினான். ஆனால், வேரில் கட்டிய கயிறு இருப்பதைப் பார்த்ததும் சந்தேகத்துக்கு இடமில்லாமல் போயிற்று. கயிற்றின் முடிச்சு எப்படியோ அவிழ்ந்து, படகு ஆற்றோடு போயிருக்க வேண்டுமென்றுதான் தீர்மானிக்க வேண்டியிருந்தது.

''பொன்னா! என்ன யோசிக்கிறாய்? நீந்திப் போய்விடலாமா?'' என்றான் விக்கிரமன்.

''கொஞ்சம் பொறுங்கள் மகாராஜா! கரையோடு ஓடிப் போய் எங்கேயாவது படகு தங்கியிருக்கிறதா என்று இதோ பார்த்துவிட்டு வருகிறேன்'' என்று



சொல்லிவிட்டு பொன்னன் நதிக்கரையோடு ஓடினான்.

## 28. குந்தவியின் நிபந்தனை

பொன்னன் மறைந்த கணம் இலைச் சருகுகள் அலையும் சப்தம் கேட்டு, விக்கிரமன் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தான். குந்தவி மரங்களின் மறைவிலிருந்து

வெளியே வந்துகொண்டிருந்தாள்.

இருவரும் ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டு சற்று நேரம் மௌனமாய் நின்றார்கள்.

''சோழ நாட்டாரின் யோக்கியதை நன்றாய்த் தெரிந்துபோய்விட்டது. இப்படித்தான் சொல்லிக்கொள்ளாமல்கூட ஓடிப்போகப் பார்ப்பார்களா?'' என்றாள் குந்தவி.

விக்கிரமன் மறுமொழி சொல்லாமல் சும்மா இருந்தான்.

''வள்ளுவர் பெருமான் 'முயற்சி திருவினையாக்கும்' என்று மட்டும்தானா சொல்லியிருக்கிறார்? 'நன்றி மறப்பது நன்றன்று' என்றும் சொல்லியிருப்பதாக எனக்குக் கேள்வியாயிற்றே?'' என்று குந்தவி சொன்னபோது, விக்கிரமனுக்குத் தூக்கிவாரிப்போட்டது.

''உனக்கு எப்படித் தெரியும்? ஒரு வேளை...'' என்று மேலே பேசத் திணறினான்.

''ஆமாம்; நீங்கள் குழி தோண்டிப் புதையல் எடுத்ததைப் பார்த்துக் கொண்டிருந்தேன்; எல்லாம் கேட்டுக் கொண்டுமிருந்தேன்.''

''உண்மையாகவா?''

''ஆமாம்; உங்கள் பொய் வேஷத்தையும் தெரிந்துகொண்டேன்.''

விக்கிரமன் சற்று யோசித்து, ''அப்படியானால் நான் சொல்லிக் கொள்ளாமல் ஓடிப்போக நினைத்ததில் என்ன ஆச்சரியம்? தேசப்பிரஷ்டன் - மரண தண்டனைக்குத் துணிந்து தாய்நாட்டுக்கு வந்தவன் - சொல்லாமல் திரும்பி ஓடப் பார்ப்பது இயல்பல்லவா?'' என்றான்.

''உயிர் இழப்பதற்குப் பயந்துதானே?''

''ஆமாம்; இந்த உயிர் இன்னும் கொஞ்ச காலத்துக்கு எனக்குத் தேவையாயிருக்கிறது. என் தந்தைக்கு நான் கொடுத்த வாக்குறுதியை நிறைவேற்றுவதற்கும், இந்தத் தாய்த்திருநாட்டுக்கு நான் செய்ய வேண்டிய கடமையைச் செய்வதற்கும் இந்த உயிர் வேண்டியிருக்கிறது...''

''ஆனால், உங்களுடைய உயிர் இப்போது உங்களுடையதல்லவே? மகேந்திர மண்டபத்தில் அந்தப் பழைய உயிர் போய்விட்டது. இப்போது இருப்பது நான் கொடுத்த உயிர் அல்லவா? இது எனக்கல்லவா சொந்தம்?'' என்றாள் குந்தவி.

விக்கிரமன் மீண்டும் யோசனையில் ஆழ்ந்தான். பிறகு குந்தவியை உருக்கத்துடன் நோக்கி, ''நீ சொல்லியது ஒருவிதத்தில் அல்ல; பலவிதத்திலும் உண்மை. இந்த உயிர் உன்னுடையதுதான். மகேந்திர மண்டபத்தில் நீ என்னைப் பார்த்துக் காப்பாற்றியதனால் மட்டும் அல்ல; மூன்று வருஷத்துக்கு முன்பு காஞ்சியிலும், மாமல்லபுரத்திலும் உன்னைப் பார்த்தபோதே, என் உயிரை உன்னுடையதாக்கிக்கொண்டாய்...'' என்றான்.

''ஆ! இது உண்மையா?'' என்றாள் குந்தவி.

''ஆமாம். ஆகையினால் உன்னுடைய உயிரையேதான் நீ காப்பாற்றிக் கொண்டாய்...''

''இது உண்மையானால், என்னிடம் சொல்லிக்கொள்ளாமல் ஓடப் பார்த்தீர்களே, அது எப்படி? என்ன நியாயத்தில் சேர்ந்தது?'' என்று குந்தவி

''இப்போது இருப்பது நான் கொடுத்த உயிர் அல்லவா? இது எனக்கல்லவா சொந்தம்'' என்றாள் குந்தவி.

கடுமையான குரலில் கேட்டாள்.

"அது தவறுதான். ஆனால், காரணம் உனக்குத் தெரியாதா? உன்னிடம் சொல்லிக் கொண்டால், பிரிய மனம் வராது என்ற பயம்தான் காரணம். நீ விடைகொடுக்கா விட்டால் போக முடியாதே என்ற எண்ணம்தான் காரணம்..."

"என்னைப் பற்றி அவ்வளவு கேவலமாக ஏன் எண்ணினீர்கள்? நீங்கள் போவதை நான் ஏன் தடுக்க வேண்டும்? உங்களுடைய கடமையைச் செய்வதற்கு நான் ஏன் குறுக்கே நிற்க வேண்டும்?"

"நான் எண்ணியது பிசகு என்று இப்போது தெரிகிறது. உன்னிடம் நான் எல்லாவற்றையும் முதலிலேயே சொல்லி யிருக்க வேண்டும். சொல்லி, உன்னுடைய உதவியைக் கோரியிருக்க வேண்டும். மறைக்க முயன்றது பிசகுதான்."

"போனது போகட்டும்; இனிமேல் நடக்க வேண்டியதைப் பேசுவோம். உங்கள் படகோட்டி திரும்பி வரும் வரையில் இங்கே உட்காரலாம்" என்றாள் குந்தவி.

**ப**டகோட்டி என்றதும் விக்கிரமன் மனத்தில் ஒரு சந்தேகம் உதித்தது. குந்தவியைச் சிறிது வியப்புடன் நோக்கினான்.

"இங்கே கட்டியிருந்த படகு எங்கே யென்று தெரியுமா?" என்று கேட்டான்.

"தெரியும்; ஆற்றோடு போய்விட்டது. படகோட்டிக்கு வீண் அலைச்சல்தான்."

"எப்படிப் போயிற்று? ஒரு வேளை நீ..."

"ஆம்; நான்தான் படகின் முடிச்சை அவிழ்த்துவிட்டேன். என்னிடம் சொல்லிக் கொள்ளாமல் போக நினைத்ததற்குத் தண்டனை!"

விக்கிரமன் சற்று மௌனமாயிருந்து விட்டு, "அதுதான் முன்னமே சொன்னேனே. உன்னிடம் சொல்லிக் கொண்டால், பிரிந்து போக மனம் வருமோ, என்னவோ என்று பயந்தேன்" என்றான்.

"அம்மாதிரியெல்லாம் பயந்து கொண்டிருந்தால், உங்கள் மூதாதையான கரிகால சோழர் தீவாந்திரங்களையெல்லாம் வென்றிருக்க முடியுமா?" என்று குந்தவி கேட்டாள்.

"முடியாது. ஆகையால்தான் இப்போது தைரியமாக உன்னிடம் விடை கேட்கிறேன். உதவியும் கேட்கிறேன். இந்த நதியைத் தாண்டுவதற்குப் படகும், அப்பால் மாமல்லபுரம் போவதற்குக் குதிரையும் கொடுத்து உதவ வேண்டும்."

"கொடுக்கிறேன். ஒரு நிபந்தனை இருக்கிறது."

"நிபந்தனையா?"



"அந்த டிராஃபிக் போலீஸ் ஜீப்பில் பொருத்தமாகத்தான் எழுதியிருக்குன்னு சொன்னியே! அப்படி என்ன எழுதியிருக்கு?"

"நில், 'கவனி', செல்."

- ஆ.விஜயலக்ஷ்மி

''என் காதலரின் நடவடிக்கைகளைப் பார்த்தால் எனக்கு பயமாக இருக்கிறது.''

''கைவிட்டு விடுவாரோ என்ற பயமா?''

''இல்லை. இல்லை. கல்யாணம் செய்து கொண்டு விடுவாரோ என்ற பயம்தான்.''

- லலிதா செல்லப்பா



''ஆமாம், கண்டிப்பான நிபந்தனை. போன தடவையைப் போல் என்னைக் கரையில் நிறுத்திவிட்டு நீங்கள் கப்பலில் போய்விடக் கூடாது. நீங்கள் போகும் கப்பலில் என்னையும் அழைத்துப் போக வேண்டும்.''

விக்கிரமனுக்கு அளவில்லாத திகைப்பு உண்டாயிற்று. குந்தவியின் மெல்லிய கரத்தைப் பிடித்துக்கொண்டு தழுதழுத்த குரலில், ''தேவி! என்ன சொன்னாய்? என் காதில் விழுந்தது உண்மையா? அவ்வளவு பெரிய அதிர்ஷ்டத்தைப் பெறுவதற்கு நான் என்ன செய்துவிட்டேன்! உலகமெல்லாம் புகழ் பரவிய மகாபல்லவ சக்கரவர்த்தியின் ஏக புதல்வியாகிய நீ, இந்த தேசப்பிரஷ்டனுடன் கூடக் கடல் கடந்து வருவாயா!'' என்றான்.

குந்தவி, காவேரியின் பிரவாகத்தை நோக்கியவண்ணம், ''உங்களுக்கென்ன இவ்வளவு சந்தேகம்? பெண் குலத்தைப் பற்றியே நீங்கள் இழிவாக நினைக்கிறீர்கள்; அதனாலேதான் சந்தேகப்படுகிறீர்கள்'' என்றாள்.

''இல்லவே இல்லை. அருள்மொழியைத் தாயாகப் பெற்ற நான், பெண் குலத்தைப் பற்றி ஒருநாளும் இழிவாக நினைக்க மாட்டேன். ஆனால், நீ என்னுடன் வருவது எப்படிச் சாத்தியம்? உன் தந்தை... சக்கரவர்த்தி... சம்மதிப்பாரா?''

''என் தந்தை நான் கேட்டது எதையும் இதுவரை மறுத்ததில்லை, இப்போதும் மறுக்கமாட்டார்...''

அப்போது, ''மகாராஜா!'' என்ற குரலைக் கேட்டு இருவரும் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தார்கள்.

அந்தக் குரல் பொன்னனுடையதுதான். அவர்கள் உலகை மறந்து பேசிக் கொண்டிருந்த சமயம், பொன்னன் மெதுவாகப் பின்புறமாக வந்து, அவர்கள் அருகில் நின்றுகொண்டிருந்தான். கடைசியாக, அவர்கள் பேசிய வார்த்தைகளும் அவன் காதில் விழுந்தன.

விக்கிரமன் பொன்னனைப் பார்த்து, ''எப்பொழுது வந்தாய் பொன்னா? படகு அகப்படவில்லையே? இந்த தேவிதான் படகை அவிழ்த்து விட்டுவிட்டாராம். நமக்கு வேறு படகு தருவதாகச் சொல்கிறார்'' என்றான்.

''காதில் விழுந்தது மகாராஜா! ஆனால், இவ்வளவு தொல்லையெல்லாம் எண்ணத்துக்கு என்றுதான் தெரியவில்லை. தேவி சொல்வதை ஒரு நாளும் சக்கரவர்த்தி தட்டமாட்டார். தங்களைப் பற்றி ஒரு வார்த்தை சொல்லி...''

குந்தவி வீராவேசத்துடன் எழுந்து



பொன்னனுக்கு எதிராக நின்றாள். "என்ன சொன்னாய் படகோட்டி? உங்கள் மகாராஜாவை மன்னித்துக் காப்பாற்றும்படி சக்கரவர்த்தியிடம் நான் சொல்ல வேண்டுமா? ஒரு தடவை அந்தத் தவறு நான் செய்தேன். இனிமேல் செய்ய மாட்டேன். இவர் தமது கையில் பிடித்த கத்தியின் வலிமையினால் ஒரு சாண் பூமியை வென்று ராஜாவானால், அந்தச் சாண் பூமிக்கு நான் ராணியாயிருப்பேன். இவர் உன்னைப் போல படகோட்டிப் பிழைத்து ஒரு குடிசையில் என்னை வைத்தால், உன் மனைவி வள்ளியைப் போல் நானும் அந்தக் குடிசையில் ராணியாயிருப்பேன்.

''அதோ பாருங்கள்! படகுகளில் வீரர்கள் வருவதை'' என்றான் பொன்னன்.

இவரை மன்னிக்கும் படியோ, இவருக்குச் சோழ ராஜ்யத்தைக் கொடுக்கும்படியோ சக்கரவர்த்தியை ஒரு நாளும் கேட்க மாட்டேன். எனக்காக நான் என் தந்தையிடம் பிச்சை கேட்பேன். ஆனால், இவருக்காக எதுவும் கேட்டு இவருடைய வீரத்துக்கு மாசு உண்டாக்கமாட்டேன்!'' என்றாள்.

பொன்னன், ''தேவி...'' என்று ஏதோ சொல்ல ஆரம்பித்தான். அவனைப் பேச விடாமல், குந்தவி மீண்டும் "ஆம், இன்றைய தினம் இவருடைய வேஷம் வெளிப்பட்டு, இவருக்கு மரண தண்டனை அளிக்கப்பட்டாலும் நான் உயிர்ப்பிச்சை கேட்க மாட்டேன். தண்டனையை நிறைவேற்றுவதற்கு முன்னால் என்னை இவருக்கு மணம் புரிவிக்க வேண்டுமென்று மட்டும் வரம் கேட்பேன்!'' என்றாள்.

''தேவி; தாங்கள் அவ்விதம் வரம் கேட்க வேண்டி வருமென்றே தோன்றுகிறது. அதோ பாருங்கள்! படகுகளில் வீரர்கள் வருவதை'' என்றான் பொன்னன்.

**வி**க்கிரமனும் குந்தவியும் துணுக்கமடைந்தவர்களாக பொன்னன் கை காட்டிய திசையை நோக்கினார்கள். உறையூர்ப் பக்கத்திலிருந்து நான்கு படகுகள் வந்துகொண்டிருந்தன. வசந்தத் தீவில் அடர்த்தியாக வளர்ந்திருந்த மரங்கள் இத்தனை நேரமும் அப்படகுகளை மறைத்துக்கொண்டிருந்தன. இப்போது தான் அவை ஒரு முடுக்கத்தில் திரும்பி அவர்களுடைய கண்ணுக்குத் தெரிந்தன. படகுகளில் பொன்னன் சொன்னபடியே வேல் தாங்கிய வீரர்கள் கும்பலாயிருந்தார்கள்.

படகுகள் கணத்துக்குக் கணம் கரையை நெருங்கி வந்துகொண்டிருந்தன.



(தொடரும்)

கே.சி.பிரபாகரன்

# மேன்ஷன் குளியல்

பீச் செல்லாத
கடல் குளியல் தினமும்
உப்பு நீரானாலும்
சுரணை மழுங்கித்தான் போகிறது
தானாகவே.

மேன்ஷன் வாசிகளுக்கு
அவசரக் குளியலிலும்
கதவு தட்டப்படும்
முடிப்பதற்குள்

எப்படி உராய்த்தாலும்
நுரை தர முடியாது - வாசனை நிரம்பிய
சோப்புக்களால்

தலை துவட்டுகையில்
நினைவில் வரும்
நீர்கோழி பிடித்ததும் - நீண்ட நேரம்
குளித்து கண் சிவந்தற்காய்
அப்பாவால் முதுகு விரிந்ததும் -

மேன்ஷனை நிரப்பும்
கிராமவாசிகளுக்கு

# அருள்வாக்கு

# கணக்கு

பணம், பேச்சு, அப்புறம் நாம் செய்கிற காரியம் - காரியத்திலும் அளவுடன், கணக்குடன் இருக்க வேண்டும். ஆசையாய் இருக்கிறது என்பதற்காக அவசியமில்லாத, அல்லது கெட்டதான, காரியங்களைச் செய்யவே கூடாது. ஆத்ம சிரேயஸுக்கோ, லோகக்ஷேமத்துக்கோ பிரயோஜனமில்லாத காரியங்களில் ஈடுபடவே கூடாது.

எல்லாவற்றையும்விட முக்கியம், எண்ணத்தில் கணக்காயிருப்பது. இப்போது நம சித்தம், ஒரு க்ஷணத்தில் கோடி எண்ணங்களை எண்ணிவிடுகிறது. எண்ணத்துக்கு ஒரு கணக்கு வழக்கேயில்லாமல் இருக்கிறது. இப்படி அதைத் தறிகெட்டுப் போக விடக் கூடாது. எத்தனை கஷ்டப்பட்டாவது, கொஞ்சம் கொஞ்சமாக பிரயத்தனம் பண்ணி, இந்த எண்ண ஓட்டத்துக்கு அணை போட்டேயாக வேண்டும். ஒரே வஸ்துவை நினைப்பது - நினைப்பதுகூட இல்லாமல் அதுவாகவே ஆவது - இதெல்லாம் இப்போது முடியாத காரியம். ஆனாலும், இப்போதிலிருந்து கூடியவரையில் சத் விஷயங்களை மட்டுமே எண்ண ஆரம்பிக்கவேண்டும். சித்தம் சிதறச் சிதற அத்தனைக்கத்தனை அதற்கு பலக் குறைவுதான். அணைபோட்டு ஒரு சில நல்ல விஷயங்களில் மட்டும் அதைத் திருப்பிவிட்டால், அது சக்தியுடன் செயலாற்றி, உத்தமமான பிரயோஜனங்களை உண்டாக்கும். அவசியமில்லாத எண்ணங்களில் மனசை ஓடவிட்டுக் கொண்டேயிராமல், இது இதைத்தான் நினைப்பது என்று 'கணக்காயிருக்கணும்.'

- ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர
சரஸ்வதி சங்கராச்சார்ய
சுவாமிகள்



வாரம் ஒரு பாசுரம்
பாகம் - 2

# பார்ப்பதும் கேட்பதும்



வேங்கடம் என்ற பெயர் எப்படி வந்தது? அதன் பொருள் என்ன? தன்னை அடைந்தவர்கள் பாவங்களை ஒழிப்பதனால் இப்பெயர் பெற்றது. வேம் என்றால் பாவம், கடம் என்றால் எரித்தல். அழிவின்மை, ஐதவபரியம் என்றும் மற்றொரு அர்த்தம் உண்டு.

நம்மாழ்வாரின் திருவிருத்தத்தில் அகத்துறை சார்ந்த பாடல்கள் இருப்பதைக் குறிப்பிட்டோம். தலைவன் பணம் சம்பாதிக்கப் பிரிந்ததை அறிந்த தலைவி, தோழியிடம் சொல்வதாக ஒரு பாசுரத்தில், ஆழ்வார், இலக்கணத்தில் சில சுதந்திரங்கள் எடுத்துக் கொள்கிறார். காண்கின்றன என்பதே பன்மை. அந்தப் பன்மைக்குப் பன்மையாக 'காண்கின்றனகள்' என்று இரட்டைப்பன்மை அமைத்து, ஒரு புதுமை செய்கிறார்.

*'காண்கின்றனகளும் கேட்கின்றனகளும்*
*காணில், இந்நாள்*
*பாண் குன்ற நாடர் பயில்கின்றன,*
*இது எல்லாம் அறிந்தோம் -*
*மாண் குன்றம் ஏந்தி தண் மா மலை*
*வேங்கடத்து உம்பர் நம்பும்*
*சேண் குன்றம் சென்று பொருள் படைப்பான்,*
*கற்ற திண்ணனவே.'*

'நான் பார்ப்பதையும் கேட்பதையும் ஆராய்ந்து பார்த்தால், இந்த தினத்தில் இதெல்லாம் மலைநாட்டுக்காரர்கள் வழக்கம் என்று தெரிகிறது. கோவர்த்தன மலையைக் குடையாய்ப் பிடித்த கண்ணபிரானது வேங்கட மலையில், தேவர்கள் அணுகும் சிகரத்தை அடைந்து பொருள் படைக்க என்று அறிந்தோம்.'

இப்பொழுதெல்லாம் 'பொருள் படைக்க' நம் மென்பொருள் இளைஞர்கள், கலிஃபோர்னியா, லாஸ் ஏஞ்ஜெல்ஸ் என்று சென்று, அங்கே ஒரு வேங்கடத்தை அமைத்துக்கொண்டிருக்கிறார்கள். பக்தர்கள் வேங்கடம் போகாமல் வேங்கடவன் பக்தர்களை நாடியுள்ளான். ஆழ்வாரைப் பொறுத்த வரையில் ரெண்டும் ஒன்றுதான்.

(படிக்கலாம்)

சுஜாதா

# கலகம் பிறந்தது எனக்காக-12

'திருமணத்துக்கு முன்போ... பின்போ, எதுவாக இருந்தாலும் பாலியல் தொடர்பைப் பாதுகாப்பாக வைத்துக் கொண்டால் தவறே இல்லை. எனவே திருமணத்துக்கு முன் அவ்வாறு செய்பவர்களைத் தடுத்து நிறுத்தத் தேவையில்லை. நிறுத்தவும் முடியாது.'

சானியாவின் இந்தப் 'பொன்னான' வார்த்தைகளுக்குத்தான் பலத்த எதிர்ப்பு கிளம்பியது. இங்கே குஷ்புவுக்கு எழுந்த சர்ச்சைக்குக் கொஞ்சமும் சளைக்காமல் ஆந்திராவில் அரங்கேறியது சர்ச்சை நாடகம். ஆனால், அம்மணி தொடர்பான சர்ச்சைகளுக்கெல்லாம் சிகரம் வைத்தது குட்டைப் பாவாடை விவகாரம்தான்.




வழக்கமாக எல்லா வீராங்கனைகளும் அணிந்துகொண்டு விளையாடும் குட்டைப் பாவாடை, டீ-ஷர்ட்டைத்தான் சானியாவும் பயன்படுத்தினார். ஆனால், சானியா மட்டும் அப்படி ஆடக்கூடாது என்று தடைவிதித்தனர் இஸ்லாமிய அடிப்படைவாதிகள். ஏன் அணியக் கூடாதாம்?

'கவர்ச்சிகரமான ஆடைகள் அணிவதை இஸ்லாம் அனுமதிக்கவில்லை. ஆகவே, குட்டைப் பாவாடை, இறுக்கமான டீ-ஷர்ட் அணிந்து சானியா விளையாடுவதை ஏற்க முடியாது. முன்பெல்லாம் வீராங்கனைகள் நீளமான பாவாடை, முழுக்கைச் சட்டை அணிந்தே விளையாடினார்கள். சானியாவும் ஏன் அப்படிப்பட்ட ஆடைகளை அணியக் கூடாது? ஒரு வேளை கவர்ச்சிகரமான உடைகள் அணிந்துதான் டென்னிஸ் விளையாட வேண்டும் என்று விதிமுறை இருந்தால் பரவாயில்லை. ஆனால், வேண்டுமென்றே கவர்ச்சிகரமான ஆடைகளை உடுத்துவது இஸ்லாத்துக்கு எதிரானது. ஆகவே, கண்டிக்கத்தக்கது' என்று பதிலளித்தனர் இஸ்லாமிய அமைப்பைச் சேர்ந்தவர்கள்.

என்ன பதில் சொல்வது என்று தெரியாமல் திணறியபோது, சானியாவுக்கு ஆதரவாகவும் சில கருத்துகள் முளைத்தன.

'நீச்சல் விளையாட்டுகளில் டென்னிஸைவிட கவர்ச்சிகரமான ஆடைகள் பயன்படுத்தப்படுகின்றன. அப்படியிருக்கும்போது சானியாவைக் குறை சொல்வது தேவையற்றது. தவிரவும், அவர் இஸ்லாத்துக்கு எதிராக எதையும் செய்யவில்லை. தினமும் ஐந்து வேளைகள் தொழுகை நடத்தக்கூடியவர். ஆகவே, அவரை மத ரீதியாக விமர்சிக்கக் கூடாது. விளையாட்டை விளையாட்டாகவே எடுத்துக்கொள்ள வேண்டும்' என்ற குரலும் எழுந்தது.

தமக்கு ஆதரவாக எழுந்த கருத்துகள் கொடுத்த தெம்பில், தம்முடைய எதிர்ப்பாளர்களுக்குப் பதிலடி கொடுத்தார் சானியா.

'மைதானத்துக்கு வெளியே நான் என்ன செய்கிறேன், என்ன உடை அணிகிறேன், என்ன சாப்பிடுகிறேன், என்ன பானம் பருகுகிறேன் என்பது பற்றி மற்றவர்கள் கவலைப்பட வேண்டியதில்லை. மைதானத்தில் நான் வெற்றி பெறுகிறேனா தோல்வி அடைகிறேனா என்றுதான் பார்க்க




வேண்டும். அதை விட்டுவிட்டு, எனது உடை ஆறு அங்குலமா அல்லது ஆறு அடியா என்று யாரும் கவலைப்படத் தேவையில்லை. நான் டென்னிஸ் விளையாடுவதற்கே அதிக முக்கியத்துவம் கொடுக்கிறேன். இங்குள்ளவர்கள் ஏனோ விளையாட்டையும் மதத்தையும் தொடர்பு படுத்தி பார்க்கின்றனர். நான் ஒரு விளையாட்டு வீராங்கனை. மதம், என்னுடைய தனி வாழ்க்கை. இந்த வித்தியாசம் தெரியாமல் எனக்கு எதிராகக் கேள்விக் கணை

# ஆர்.முத்துக்குமார்

களைத் தொடுத்துக்கொண்டே இருந்தால், என்னால் விளையாட்டில் கவனம் செலுத்த முடியாது' என்று பொரிந்து தள்ளிவிட்டார்.

அதன்பிறகு குட்டைப் பாவாடைக்குப் பதிலாக ட்ரௌசர் அணிந்துகொண்டு ஆடத் தொடங்கினார் சானியா. ஆனாலும், சானியாவின் ஒவ்வோர் அசைவையும் பூதக்கண்ணாடி போட்டுக்கொண்டு குற்றப் பத்திரிகை வாசிப்பதை யாரும் நிறுத்திக் கொள்ளவில்லை.

'பொறுத்தது போதும்' என்று பொங்கி யெழுந்துவிட்டார் சானியா.

'இந்தியாவில் விளையாடினால்தானே அப்படிச் செய்யாதே, இப்படிச் செய்யாதே, அதை அணிந்து கொள், இதை அணியாதே என்று சொல்வீர்கள். இனிமேல் நான் இந்தியாவிலேயே விளையாடப் போவதில்லை. முழுக்க முழுக்க வெளிநாடுகளில் நடக்கும் போட்டிகளில் மாத்திரமே கலந்துகொள்ளப்போகிறேன்' என்று ஒரே போடாகப் போட்டுவிட்டார்.

இது விளையாட்டு ஆர்வலர்கள் மத்தியில் அதிர்வுகளை ஏற்படுத்திவிட்டது.

'அது எப்படி, ஆளை விடுங்க சாமி என்ற பாணியில் அவர் பேசலாம்? இன்று அவருக்கு இருக்கும் பணம், புகழ், சாதனை என எல்லாமே இங்கிருந்து கிடைத்தவை. இன்று சர்வதேச அந்தஸ்து கிடைத்ததும் ஏற்றிவிட்ட ஏணியை எட்டி உதைக்க முடிவெடுத்துவிட்டார். எல்லாம் புகழ் கொடுத்த போதை' என்று காட்டமாக விமர்சனம் செய்கின்றனர்.

இப்போதைய சூழ்நிலையில் மரியா ஷரபோவாவின் சர்வீஸ்களோ, கிம் கிளைஸ்டர்ஸின் ஏஸோ அல்ல. இஸ்லாமிய அடிப்படைவாதிகள் அடிக்கும் ஷாட்கள்தான் அவரைத் திக்குமுக்காட வைத்துள்ளன. ரிட்டர்ன் ஷாட் அடிக்க முடியாமல் மூச்சு வாங்கிக் கொண்டிருக்கிறார்!

**(அடுத்த இதழில்... சுப்ரமணிய சுவாமி)**

**சிவகுமார் முத்தய்யா**

# மௌனியின் நிழல்

பார்த்தசாரதி கோயில் ஆர்ச்சில் வெகுநேரமாக நின்று, பெருமாளை வணங்கித் திரும்பும் ஜனங்களைப் பார்த்துக் கொண்டிருந்தான் கணேசன். திருவல்லிக்கேணி இவனுக்குப் புதிய ஊர் என்றாலும் நீண்ட நாட்கள் இந்தத் தெருக்களிலும் கடைவீதிகளிலும் சுற்றி வந்தவன்போல ஒரு நெருக்கம் ஏற்பட்டு இருந்தது. நான்கு நாட்களாக கோயிலையும் அதன் சுற்று வட்டாரத் தெருக்களையும் சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருந்தான் கணேசன். தங்கியிருந்த அறையில் உறங்கவே பிடிக்கவில்லை. அலைய வேண்டும்போல் ஒரு வெறி ஓர் ஆவல் எழுந்துகொண்டேயிருந்தது. இது புது அனுபவம். கால்சென்டர் வேலை சம்பந்தமாக இன்டர்வியூக்காக வந்திருந்தான். பதிலை நான்கே நாட்களில் தெரிவிப்பதாகச் சொல்லியிருந்தார்கள். கணேசன் ஒரு நாள் முன்பாகவே வந்துவிட்டிருந்தான். அவர்கள் பதிலுக்கு இன்னும் ஒரு நாள் மட்டுமே பாக்கியிருந்தது. என்ன பதில் என்று தெரிந்துவிட்டால், ஊருக்குக் கிளம்பிவிடலாம். கோயிலுக்குச் செல்லும் சின்னத்தம்பித் தெருவிலிருந்து ஜனத்திரளில் ஒருவர் வந்துகொண்டிருந்தார். அவர் முகத்தைப் பார்த்தான். எங்கோ பார்த்துப் பழகிய முகம் போல் தெரிந்தது. உற்றுக் கவனித்தான்.

'அட... நம்ம செம்மங்குடி மாமா... அம்மாவின் பெரியப்பா மகன்.'

அவர் எதிரே சென்றான். சட்டென்று திரும்பிப் பார்த்தார்.

''நீங்க செம்மங்குடி ஜெயச்சந்திரன் மாமாதானே?''

ஒரு கணம் யோசித்தார்...

''நீ யாரு?'' ஒரு வார்த்தையில் கேட்டார்.

''நான் கணேசன், ஜெகதம்பா மகன்.''

''நம்ம கணேசா நீ? இப்படி வளர்ந்துட்டே!''

பதற்றமில்லாமல் தலையாட்டினான். அவர் முகத்தில் மலர்ச்சி மின்னியது.

''மாமா, ஆளே மாறிப்போயிட்டீங்க. ஆனா முகத்துல எந்த மாற்றமும் இல்ல.''

''பத்து வருஷம் இருக்குமாடா கணேசா, என்னைப் பார்த்து?''

''பதிமூணு வருஷமாகுது மாமா!''

கணேசன் மாமாவை இப்படிப் பார்ப்போம் என்று சிறிதும் நினைக்கவில்லை. 'இவ்வளவு நாள் ஏன்தான் இப்படி யார் கண்ணிலும் படாமல் இருந்தாரோ...?'

''மாமா ஒரு காஃபி குடிக்கலாமா?''

''பேஷா குடிக்கலாம்டா கணேசா.''

இருவரும் நடந்தார்கள் பேசப் பேச நிறைய விஷயங்கள் இருந்தன. உறவினர் பற்றிய விசாரிப்புகள். ஊர் நிலவரம், விவசாயம். பேசிக்கொண்டே காஃபி குடித்தார்கள்.

உரையாடல் நீண்டுகொண்டே போயிற்று.

''மாமா கடலுக்குப் போகலாமா?''

கடற்கரைக்குச் செல்லும் சாலையில் இறங்கி நடக்கத் தொடங்கியபோது... மாலைப்பொழுது மெல்ல வரத் தொடங்கியிருந்தது. ஜோடிஜோடியாக வந்துகொண்டிருந்தார்கள் மக்கள்.

''மாமா, இந்த ஊருக்கு நான் வந்து



நாலு நாள்தான் ஆகுது. ரொம்ப புடிச்சிப் போச்சு. இந்த தெருங்க, கடை வீதிங்க. பெருமாள் கோயில் எனக்கு நீண்ட நாட்கள் பழகின மாதிரியான பிரமையை ஏற்படுத்துது.''

அவர் கணேசனைப் பார்த்தார். சில நிமிடங்கள் கரைந்தன.

''மௌனி கதைகள் எதுவும் படிச் சியா?''

''உங்க ஊர் எழுத்தாளர். இல் லையா?''

''வாய்ப்பு இருந்தா படி. நான் தர்றேன். இப்பவும் என் ஊர் ஞாபகமா, மௌனி யோட கதைகள்தான் மனசிலேயும்... என் பெட்டிலயும் வச்சிருக்கேன்.''

''நான் படிக்கிறேன், அவசியம் கொடுங்க. சரி, இந்த பதிமூணு வருஷமா, இங்கதான் இருக்கீங்களா? வேறு எங்கா

கம் இருந்தீங்களா? ஏன் எங்களுக்கு ஒரு லெட்டர்கூட போடலை? அம்மாதான் உங்களைப் பத்தியே பேசிக்கிட்டு இருப்பாங்க.''

மாமா, அம்மாவின் ஒன்றுவிட்ட பெரியப்பாவின் மகன். பி.ஏ. தமிழ் இலக்கியம் படித்தவர். மாமாமீது அவர் அப்பாவுக்கு நீண்ட நாட்களாகக் கோபம் இருந்தது. ஒரு நாள் சண்டை முற்றிவிட, யாரிடமும் சொல்லிக்கொள்ளாமல் கோபித்துக்கொண்டு போய்விட்டார். அப்போது கணேசன் பத்தாம் வகுப்பு படித்துக்கொண்டிருந்தான். முன்பு அடிக்கடி வீட்டுக்கு வருவார் மாமா. ''கணேசா, நான் எதுக்கு வீட்டை விட்டு இப்படித் தனியாக அலைந்துகொண்டிருக்கிறேன் தெரியுமா? எனக்கு மௌனி பைத்தியம் பிடிச்சிருக்கு. ஆமான்டா... நாடோடி மாதிரி சுத்திக்கிட்டே இருக்கணும். கோயில் குளம், தெருக்கள், கடல், மலை, அருவி, காடு என்னை அழைச்சிக்கிட்டே இருக்கு.

**வீ**ட்டைவிட்டுக் கிளம்பி நான் போனது, இராமேஸ்வரம். அந்தக் கடல்... ஈஸ்வரன்.. அந்தத் தெருக்கள் இவற்றைச் சுற்றி சுற்றி வந்துகொண்டிருந்தேன். ராமநாத சுவாமியே 'இந்தத் தெருவைச் சுத்தி வாடா'ன்னு சொன்ன மாதிரி தோணியது. சமயங்களில் வெட்டவெளியில் நின்று காற்றையும் பறவைகளையும் வேடிக்கை பார்த்துக்கொண்டிருப்பேன். வெயில் எனக்கு உறைக்காது. நடக்க வேண்டும் என்ற தீவிரம் மட்டுமே என்னைப் பற்றும். கணேசா நானும் காதலிச்சேன். தெரியுமாடா?''

கணேசன் மாமாவின் முகத்தைப் பார்த்தான். அதில் துளியும் களங்கமில்லை. குழந்தையின் குதூகலமும் சந்தோஷமும் அவர் சொற்களில் எதிரொலித்தன.

''இராமேஸ்வரத்துல அகதிகள் முகாம்ல அவளைப் பார்த்தேன். மாநிறமா, நல்ல உயரமா இருந்தா. அடிக்கடி அந்த முகாம் வழியா போய்க்கிட்டே இருப்பேன். அவள் கண்களை எனக்கு ரொம்ப பிடிக்கும். முகாம் பக்கத்துல ஒரு டீக்கடை அங்க உட்கார்ந்து டீயோ, காஃபியோ குடிச்சுக்கிட்டே காத்துக்கிட்டு இருப்பேன். அவ முகத்தை ஒரு நாளைக்கு ஒரு தடவை பார்த்தே ஆகணும். இல்லாட்டி எதையோ இழந்த மாதிரி தோணும். அவளுக்கும் எனக்கும் இத்தனைக்கும் ஒரு பேச்சுக்கூடக் கிடையாது. பார்வைதான். அவள் முகத்துல எப்போதும் ஒரு துயரம் தெரியும். என்னைப் பார்க்கும்போது அது மாறிடும். அவள் கண்கள் மெல்லக் கலங்கும். எனக்கு தொண்டையிலே என்னமோ உருளும்டா. கர்ப்பக்கிரகத்துல இருந்து எழுந்து வந்த அம்மன் மாதிரி அவ எனக்குத் தெரிஞ்சா. இதயம் வெடிக்கிற மாதிரித் துடிக்கும். வானத்துக்கும் பூமிக்குமா குதிக்கணும் போல இருக்கும். அட ஈஸ்வரா, இதென்ன கொடுமைன்னு புலம்பிக்குவேன்...''

கணேசன், ''மாமா, இன்னொரு சுக்கு டீ குடிக்கலாமா?'' பதிலேதும் சொல்லாமல் கடலையே பார்த்தார். அவர் உதடு உலர்ந்து போயிருந்தது. பகற்பொழுது குறைந்து மெலிதான இருள் பரவத் தொடங்கியிருந்தது.

சுக்கு டீ விற்பவனை அழைத்தான் கணேசன்.

''கோயில் பிராகாரத்துலதான் இரவெல்லாம் படுத்திருப்பேன். அங்க படுத்தாதான் தூக்கம் வரும். குளத்துல குளியல். காசு பணத்துக்கு எல்லாம் கவலை இல்லை. யாரு என்ன வேலை சொன்னாலும் செய்வேன். படிச்ச படிப்பைப் பத்தியும் வாழ்க்கையைப் பத்தியும் எனக்கு இன்றுவரைக்கும் பெரிதாக ஒண்ணும் தோணலடா!''

''மாமா, உங்க லவ்வரைப் பத்திச்

## ஆதிவாசியின் காதலி!

**அ**திக பொருட்செலவில், அமர்க்களமான காட்சி அமைப்புகளோடு 'தி டே ஆஃப்டர் டுமாரோ', 'இண்டிபெண்டன்ஸ் டே' படங்களின் இயக்குனர் ரோலண்ட் எமரிச், '10000 கி.மு.' என்கிற திரைக்காவியத்தை உருவாக்கியுள்ளார். இதுவரை ரசிகர்கள் நினைத்துக்கூடப் பார்க்க முடியாத வகையில், ஒரு புதிய உலகுக்கு இயக்குனர் ரோலண்ட் எமரிச் நம்மை அழைத்துச் சென்று அசத்தியிருக்கிறார். மலையின் உச்சியில் ஆதிகால

சொல்லுங்க.''

''அன்னைக்கி வெள்ளிக்கிழமை. மார்க்கெட்ல பார்த்தேன். காய்கறி வாங்கிட்டு வந்துக்கிட்டே இருந்தா. துணிச்சலா எதிரே போயி நின்னேன். ஒரு கணம் ஆடிப் போய்ட்டா. அப்படியே நெருங்கி, 'உன் கிட்டே கொஞ்சம் பேசணும் கோயிலுக்கு வா'ன்னேன். என்னை ஒரு மாதிரியா பார்த்துட்டு என் பின்னாலே வந்து நின்னா. எனக்குப் பேச்சே வரல.

'இதப் பாருங்கள். எனக்குக் கல்யாணம் நிச்சயம் ஆயிடுச்சு. கிளிநொச்சிக்குப் பக்கத்துல காவனூர் கிராமத்துல. நான் கட்டிக்கப் போறவரை ஆர்மிக்காரங்க புடிச்சுக்கிட்டுப் போய்ட்டானாம். மீண்டும் சண்டை வந்துட்டது. நாங்கள் தப்பிச்சு வந்துட்டோம். திரும்ப எங்க நாட்டுக்குப் போகணும். இனிமேல் என்னப் பாக்குறதுக்கு முகாம் பக்கம் வராதீங்கோ. போலீஸ்காரங்க உங்கள விசாரிக்கத் தொடங்கிடுவாங்கள். தயவு செய்து இனிமேல் என்னைப் பாக்கிறதைத் தவிர்த்துக்குங்கோ.' இப்படிப் பேசிட்டு அவ என் பதிலை எதிர்பார்க்காம போயிட்டா கணேசா.''

''சரி மாமா... இவ்வளவு நாள் அப்படி இப்படின்னு அலைஞ்சுக்கிட்டு இருந்துட்டீங்க. இனிமேலாவது ஊருக்கு வரலாமில்ல.''

''வேண்டாம். இனிமேல என்னால குடும்ப வாழ்க்கைக்குள்ள வாழ முடியாது. இந்த வாழ்க்கை எனக்குப் பிடிச்சுட்டது. கோயில் குளம்ன்னு சுத்திக்கிட்டு இருந்துட்டா போதும். நிரந்தரமா இப்படியே இருந்துடுவேன். வயசு அப்படி இப்படின்னு முப்பத்தெட்டை நெருங்கிடுச்சு. எதைப் பத்தியும் நான் நெனைக்கல.

கணேசா, நான் கிளம்பறேன்டா. உன்னப் பார்த்தது ரொம்ப சந்தோஷம். என்னைப் பத்தி நீ கவலைப்படாதே. அம்மாவையும் அப்பாவையும் ரொம்ப கேட்டதாச் சொல்லு. வேலையில கண்ணும் கருத்துமா இரு. என்னை மாதிரி ஏகாந்தியா ஆயிடாதே! வீட்டுக்கு நல்ல பிள்ளையா இரு. உங்கப்பா ரொம்ப கஷ்டப்பட்டவரு. அவரு மனசு கோணாமல் நடந்துக்க. இந்த வயசு ரொம்ப பொல்லாதது. தனிமையை விரும்பும். சுருக்கமா சொல்லணுமுன்னா இது பைத்தியம் பிடிக்கிற வயசு. எனக்குப் பிடிச்ச மாதிரி உனக்கும் பிடிச்சுடுமோன்னு பயமா இருக்குடா.

என்னடா கணேசா, இப்படிப் பாக்கறே? நான் சொல்றது உனக்குப் புரியாது. நான் வரட்டுமா?'' சட்டென்று கடற்கரை இருளில் மாமா வேகமாக நடந்து போனார்.

''மாமா நில்லுங்க'' என்று குரலிட்டுக் கொண்டே கணேசன் இருளில் தேடினான். எங்கே போனார் என்று தெரியவில்லை.

சில நிமிடங்கள் இருளில் ஒளிரும் நீரலைகளைப் பார்த்தான். கடற்கரையின் இருளில் இருந்து மெர்க்குரியின் வெளிச்சத்தை நோக்கி நடக்கத் தொடங்கினான்.

மௌனியின் கதைகளை ஒரு தடவை படிக்க வேண்டும் போல உந்துதல் எழுந்தது. ●

மனிதனை நடமாடவிட்டு, அவனுக் கென்று ஓர் அழகிய காதலியைக் கொடுத்திருக்கிறார். அந்தக் காதலியை வேட்டைக்காரர்கள் சிலர் கடத்திச் செல்வதும் காதலியை மீட்பதும்தான் கதை.

கதாநாயகன் தன் காதலியை மட்டுமல்ல, தேசத்தின் கலாசாரம், பண்பாடு, நாகரிகம் அனைத்தையும் காக்க மக்களுக்காகப் போராடுகிறார்.

2008ன் மாபெரும் திரைக் காவியம்தான் '10000 கி.மு.'

**- அநாமிகா**



# தூண்டில்

கமர்ஷியல் அம்சங்கள் கலக்குற இந்தக் காலத்துல குடும்பம், காதல்னு கதை அம்சம் கொண்ட திரைப்படம் தூண்டில். திவ்யாவின் கருமுட்டையை சந்தியாவோட கர்ப்பப்பையில் வைத்து விஞ்ஞான வளர்ச்சியின் மூலம் குழந்தை பிறக்க வைக்கிறார் டாக்டர் ரேவதி. பிறந்த குழந்தைக்கு இருவரும் உரிமை கொண் டாடுகிறார்கள். இதில் குழந்தை யாருக்குச் சொந்தமாகிறது என்பதுதான் படத்தோட கதை. இதில் ஷாம் கதையின் நாயகன்.



நடிப்பில் எந்தக் குறையும் இல்லாமல் நடித்திருக்கிறார். திவ்யாவுக்குக் காதலனா கவும் சந்தியாவுக்குக் கணவனாகவும் அவர் எதிர்கொள்ளும் போராட்டம், நம் கண் களையே கலங்க வைக்கிறது. திவ்யா, நடிப்பில் மட்டுமல்ல, கவர்ச்சியிலும் தாராளமாக உலா வந்திருக்கிறார். ரசிகர்கள் மனத்தில் அவருக்கு ஓர் இடம் உண்டு. ஒரு குழந்தைக்குத் தாயாக வேண்டும் என்ற சந்தியாவின் ஏக்கச் சித்திரிப்பில் அழுத்தம் இல்லை. சந்தியாவே ஒரு குழந்தை மாதிரி இருக்கும்போது, இன் னொரு குழந்தையை அவர் கொஞ்சுவது வேடிக்கையாகத்தான் இருக்கிறது. படத் துக்கு ஒட்டாத காமெடி ட்ராக்காக இருந் தாலும், விவேக்கின் திறமையை ரசிக்க முடிகிறது. நிகழ்வுகளாக படம் முழுவதும் வெளிநாட்டில் நடக்கும் நிகழ்வுகளாக இருப்பதால், இந்தக் கதைக்கு இவ்வளவு செலவு தேவையா? என்று கேள்வி கேட்கத் தோணுது.

கொஞ்சம்கூட சிக்கல் இல்லாமல் திரைக்கதை நகர்வது புத்திசாலித்தனம்!

நா.முத்துக்குமார் பாடல் வரிகளுக்கு அபிஷேக் ரே இசை, தென்றல் வீசும் குத்தாட்டம். கவியாகவின் ஒளிப்பதிவு கண்களுக்குக் குளிர்ச்சி.

உதயசங்கர் எடிட்டிங் சீப்பில் பண்ணக் கூடிய காட்சிகளில் அதிகமாக கட் பண்ணிக் காட்டுவது தொய்வை ஏற் படுத்துகிறது. கவனம் செலுத்தியிருக்க லாம்.

'நல்ல தரமான கதையை மட்டும்தான் எடுப்பேன்' என்று உறுதியாக இருக்கும் கே.எஸ்.அதியமானுக்குப் பாராட்டுகள்! ஆனால், தூண்டில், ரசிகர்களைச் சிக்க வைக்கும் அளவுக்கு சர்க்கவில்லை!

- முத்து

# தலைவரின் அலம்பல்





''நம் அரசர், எடையைக் குறைக்கும் முயற்சியில் இறங்கி விட்டாரே? ஏன்?''

''அரசரின் எடைக்கு ஏற்ற வாறு, 'பல்லக்கு தூக்கி'கள் சம்பளம் கேட்கிறார்களாம்!''

- அ.சுஹைல் ரஹ்மான்



''தலைவரோட அலம்பல் தாங்கலை.''

''எப்படிச் சொல்றே?''

''நாங்க ஆட்சிக்கு வந்தா 20-20 கிரிக்கெட் மாதிரியே 5-5 ஓவர் கிரிக்கெட் கொண்டு வருவோம்கறாரே?''

- சென்னிமலை சி.பி.செந்தில்குமார்

''அமைச்சரே... முரசுகளை எடுத்து...''

''அடித்துப் போருக்குத் தயார்ப்படுத்தவா மன்னா?''

''இல்லையில்லை... 'முரசுகளை அழுக்கில்லாமல் துடைத்து வையுங்கள்' என்று சொல்ல வந்தேன்...''

- பில்லங்குழி பா.கணேசராஜா



''காலத்துக்கேத்த மாதிரி ஜோக்ஸ் எழுதறதாச் சொல்லிட்டு, பழைய ஜோக்ஸை அப்படியே காப்பியடிச்சு எழுதியிருக்கீங்களே?''

''இதுக்குப் பேர்தாங்க 'ரீமிக்ஸ் ஜோக்ஸ்!' ''

- சீர்காழி வி.ரேவதி

''ராதாவுக்கு ரெண்டு சாக்லெட், தேவிக்கு ரெண்டு சாக்லெட், விலாவுக்கு ஒரு சாக்லெட் வீதம் கொடுத்தால் மொத்தம் என்ன கிடைக்கும்?''

''மூணு கேர்ள் ஃபிரண்ட்ஸ் கிடைப்பாங்க சார்.''

- ஜீ.வி.சுபாஷ்





# எதிர்பார்ப்பு!

**வா**ங்கி வந்த வார இதழை அவசர அவசரமாகப் புரட்டிவிட்டுச் சலிப்புடன் தூக்கி எறிந்தேன்.

''என்னங்க, நானும் ஒரு மாதமா பார்க்கறேன். இந்த வார இதழ் வந்ததும் அவசர அவசரமாகப் பார்க்கறீங்க. அதில் எதைப் பார்க்கறீங்க?'' என்றாள் என் மனைவி சுகந்தா.

''ஒரு சிற்பி சிலையைச் செதுக்குவதுபோல், நான் சிந்தித்துச் சிந்தித்து ஒரு குட்டிக் கதை எழுதி இந்தப் பத்திரிகைக்கு அனுப்பினேன். அது பிரசுரமாகி இருக்குமாங்கிற ஆவல்.''

''ஒரு சிறுகதை பிரசுரமாகுமா? என்று இவ்வளவு ஆவலாக எதிர்பார்க்கறீங்களே, உங்க அம்மா உங்களை வரச் சொல்லி வாராவாரம் ஃபோன் செய்றாங்க. நீங்களும் 'வர்றேன் வர்றேன்'னு சொல்றீங்க. உங்க அம்மாவும் வாராவாரம் உங்க வரவுக்காக இப்படித்தானே எதிர்பார்த்துக் காத்திருப்பாங்க. பாவம் அம்மா'' என்றாள் சுகந்தா.

சாட்டையடி விழ, ''சுகந்தா கிளம்பு, அம்மாவைப் பார்த்துவிட்டு வரலாம்'' என்றேன்.

– கே.என்.சுப்பிரமணியன்

''**பே**சின மாதிரி எல்லாம் நடக்கும் தானே! பொண்ணை எங்க எல்லாருக்கும் பிடிச்சிருக்கு. ஆனா, கல்யாணத் தேதிதான் கொஞ்சம் தள்ளி வைக்கணும்!''

''அதுக்கென்னங்க! உங்க சம்மதம் இப்ப ஊர்ஜிதமாயிட்டதே எனக்குச் சந்தோஷம்தான். கல்யாணத் தேதியை உங்க விருப்பம்போல வைக்கலாம்!'' என்றார்.

''சரி பரமசிவன்! நான் அப்புறமா பேசுறேன்!'' என்று ஃபோனை 'கட்' செய்து விட்டார் ஆறுமுகம்.

ரிசீவரைக் கீழே வைத்துவிட்டுத் திரும்பினார் பரமசிவன். அங்கே அவர் மனைவி சரோஜா வந்தாள்.

''என்னங்க! வீட்ல அரிசி, பருப்பு ஒண்ணுகூட இல்லே... எப்ப வாங்கிப் போடப் போறீங்க?''

''இதோ நல்ல வழி பொறந்துருச்சு சரோஜா! நல்லூர் ஆறுமுகம் மகனுக்கு, நம்ம ஊர் மளிகைக்கடை மருதன் மகளை பொண்ணு பார்த்துப் போனாங்களே! அந்த இடம் 'கிளிக்' ஆயிடுச்சு! இப்பவே நான் புறப்பட்டுப் போய், என் கமிஷனுக்கு மளிகைச் சாமான்களை வாங்கி வந்து உன்னிடம் கொட்டிடறேன் போதுமா!'' என்றபடி மருதனின் கடை நோக்கிப் புறப்பட்டார், கல்யாணத் தரகர் பரமசிவன்.

– கு.அருணாசலம்



# தத்துவப் பணிக்குத் தங்கத் தாமரை!



● ராதா பர்னியர்

தங்கத்துக்கு டிஸ்கவுன்ட், ஃபேஷனுக்கு விழா என்று மகளிர் தினத்தை மார்க்கெட்டிங் செய்து வரும் இன்றைய காலகட்டத்தில், சென்னை ஆன்லைன் வித்தியாசமாய்ச் சிந்தித்தது. அதிகம் அறியப்படாத அரிய பெண் சாதனையாளர் ஒருவருக்கு, தங்கத் தாமரை விருது வழங்க முடிவு செய்தது இந்த இணையதள நிறுவனம். "இவ்வாண்டின் விருதுக்குரியவராக ராதா பர்னியரைத் தேர்வு செய்து பெருமிதம் அடைந்தோம்" என்கிறார், சென்னை ஆன்லைனின் எம்.டி.யான எல்.ரவிச்சந்திரன். "இது ஏகமனதான தேர்வு. இனம், மதம் கடந்த உலகளாவிய நற்சிந்தனை; எளிமையும் கட்டுப்பாடும் நிறைந்த தனிப்பட்ட வாழ்க்கை என்கிற அரிய கலவையை இவரிடத்தில் கண்டோம். அது தவிர, தியாஸஃபி என்று ஆங்கிலத்தில் குறிப்பிடும் மெய்ஞான



● ஜே.கிருஷ்ணமூர்த்தி

ஆராய்ச்சி சார்ந்த இவரது பணிகளும் அர்த்தமுள்ள ஆழமான திசையில் நடைபெற்று வருகின்றன. இயற்கையின் அழகான ரகசியங்களை விளங்கிக்கொள்ள முயற்சி செய்யும் ஆராய்ச்சியாளர் ராதா பர்னியர், பிரம்மஞான சபை (தியாஸஃபிகல் சொஸைட்டி)யின் தலைவரும்கூட" என்றார்.

விழா, எம்.ஜி.ஆர். ஜானகி கல்லூரியில் நடைபெற்றது. ராதா பர்னியர் தமது ஏற்புரையில், "வேறுபாடுகளிடையே அன்பும் புரிதலும் கொண்டு பரஸ்பரம் மதித்து வாழ இன்றைய உலகில் முயற்சி செய்தால், தீவிரவாதம் ஏது? போர்தான் ஏது?" என்று இலட்சிய நோக்கினை முன்வைத்தார். தேர்வு மதிப்பெண்களைத் தாண்டியும் வாழ்க்கை இருக்கிறது என்பதை மாணவிகளுக்கு நினைவூட்டினார்.

சென்னை ஆன்லைனின் சீனியர் துணைத் தலைவர் ராதாகிருஷ்ணன், பிரம்மஞான சபையிலிருந்து விலகிச் சென்ற தத்துவ மேதை ஜே.கிருஷ்ணமூர்த்தியை, தமது வாதத் திறமையால் மீண்டும் அச்சபைக்கு அழைத்து வந்தவர் ராதா பர்னியர் என்பதை நினைவூட்டினார்.

- ஆதர்ஷ்

## படுதலம் சுகுமாரன்




# புள்ளிகள்... கோலங்கள்...

**பொ**ன்ராஜ், திகைத்தார்.

அந்த இடத்துக்கு போலீஸ் பின் தொடர்ந்து வரும் என்று அவர் எதிர் பார்க்கவில்லை.

'ஒருவேளை, இவர்கள் வேறோ?' என்று யோசிக்கையில்-

ஜீப்பிலிருந்து குதித்து இறங்கிய போலீஸ்காரர்கள் அசோக்கைச் சுற்றி வளைத்தனர்.

''நான் சந்தேகப்பட்டது சரியாப் போச்சு'' என்றபடி ஜீப்பிலிருந்து இறங்கினார் அந்த அதிகாரி.

'அவன் வரமாட்டான், நீங்க வீட்டுக்குப் போங்க' என்று நேப்பியார் பாலமருகில், தன்னை வழியனுப்பி வைத்த அதே அதிகாரி. அசோக்கை நெருங்கி, அவன் கையிலிருந்த கவரை 'வெடுக்'கென்று பிடுங்கினார்.

''இவனை வண்டியில் ஏத்துங்க'' என்று *த்தாவிட்டார்.

''வேண்டாம்...''

பொன்ராஜ் குறுக்கிட்டார்.

''அவரை ஒன்னும் பண்ணாதீங்க. எனக்கு உதவி பண்ணத்தான் கூப்பிட்டிருக்கார்...''

''எதுவானாலும் ஸ்டேஷன்ல வச்சு பேசிக்கலாம் சார்...''

''நோ... இது பர்ஸனல் மேட்டர். நீங்க தலையிடாதீங்க. நான் ஏ.ஸி.கிட்ட பேசிக்கறேன்... அவரை விடுங்க...''

''இவனை நம்பாதீங்க. போலீஸுக்குத் தண்ணி காட்டிட்டு, இந்த மறைவான ஒதுக்குப்புறத்துக்கு உங்களைக் கூட்டிக்கிட்டு வந்திருக்கான்னா... நிச்சயமா நல்லவனா இருக்கமுடியாது. இவன் தனி ஆளா... இவனுக்குப் பின்னால் கும்பல் இருக்கான்னு பார்க்கணும். இவனோட டார்கெட் நீங்களாகக்கூட இருக்கலாம். இவ்வளவு நேரம் நீங்கள் உயிரோடு இருக்கறதே அதிசயம் தான். இங்கே அதிக நேரம் தங்கறதுகூட ஆபத்து. கார்ல ஏறுங்க..'' என்றபடி அதிகாரி ஜீப்பில் ஏற,

வேறு வழியில்லாமல், பொன்ராஜ் கார்க் கதவைத் திறந்தார்.

**கு**ணசேகர், பொறுமை இழந்திருந்தான். நாளெல்லாம் அலைந்ததில் உடல் வலி. பசிவேறு வயிற்றைக் கிள்ளியது. அண்ணனைத் தொடர்புகொள்ள முடியாதது எரிச்சலைக் கொடுத்தது.

அண்ணியின் கனவு பலித்துவிடுமோ என்று அவனுக்கும் சந்தேகம் தட்டத் தொடங்கியது. அடுத்த நொடியே 'சேச்சே... அவர்கள் பயப்படுவதில் அர்த்தமில்லை... நான் சந்தேகப்படுவதிலும் நியாயமில்லை' என்று தேற்றிக்கொண்டான். அப்போது...

**(தொடரும்)**

**ஒரு பக்கத் தொடர்**







## திருத்தி அமைக்கப்பட்ட
## தேசிய காசநோய்க் கட்டுப்பாட்டுத் திட்டம் (RNTCP)
## தமிழ்நாடு

# உலக காச நோய் தினம் - மார்ச், 24

காச நோய்க்கான அறிகுறிகள் :



3 வாரங்களுக்கு மேல் தொடர்ந்து இருமல்



மாலை நேரக் காய்ச்சல்



எடை குறைதல்



பசியின்மை



நெஞ்சு வலி



நேரடி குறுகிய கால சிகிச்சை (DOTS) முறை : காச நோயைக் குணப்படுத்த சிறந்த வழி (காச நோயைக் கட்டுப்படுத்தும் தேசியத் திட்டம்).

- இந்தியாவில் மூன்று நிமிடங்களில் இரு காசநோயாளிகள் மரணமடைகிறார்கள்.
- மற்ற நோய்களால் இறப்பவர்களின் எண்ணிக்கையை விட, காசநோயால் இறப்பவர்களின் எண்ணிக்கை அதிகம்.
- வருடத்திற்கு சுமார் 18 இலட்சம் மக்கள் காசநோயால் பாதிக்கப்படுகின்றனர். அதில், சுமார் 8 இலட்சம் மக்கள், சளியில் கிருமியுடன் டி.பி. நோயைப் பரப்பும் தன்மையுடையவர்களாக உள்ளனர்.
- கண்டுபிடிக்கப்பட்ட ஒரு காசநோயாளி முறையான சிகிச்சை எடுத்துக்கொள்ளாவிட்டால், அவர் மூலம் புதிதாக 10 லிருந்து 15 காசநோயாளிகள் உருவாகும் அபாயம் உள்ளது.
- காசநோய்க்கு எல்லா அரசு ஆரம்ப சுகாதார நிலையங்களிலும், துணை சுகாதார நிலையங்களிலும், அரசு மருத்துவமனைகளிலும், பரிசோதனையும், உலக தரம் வாய்ந்த மருந்துகளும் இலவசமாக வழங்கப்படுகிறது.
- காசநோயாளி, மருத்துவர், டாட்ஸ் பொறுப்பாளர் ஆகியோரின் கூட்டு முயற்சியால் காசநோயற்ற சமுதாயத்தை உருவாக்கலாம்.

**காசநோய் முத்திரைகளை பெருமளவில் வாங்கி காசநோயை ஒழிக்க உதவிக்கரம் நீட்டுங்கள்.**

**தமிழ்நாடு காசநோய்த் தடுப்புக் கழகம்,**
359-361, அண்ணா சாலை, சென்னை-600 006. போன்: 24321389, 24346185



## எஸ்.பி.முத்துராமன்

குன்றத்தூரில் நடந்த ஷூட்டிங்குக்கு வந்து, தீப்பந்தத்தை வைத்துக் கொண்டு ரஜினி சண்டை போடுவதைப் பார்த்து படபடப்பாகிவிட்டார் பாலசந்தர் சார். ''தீப்பந்தம் தப்பித்தவறி ரஜினி முகத்தில் பட்டுவிட்டால் விபரீதமாகிவிடும். இதுபோன்ற ரிஸ்க்கெல்லாம் எதற்காக எடுக்கிறீர்கள்? இது போல ஒரு சண்டைக் காட்சியே படத்துக்குத் தேவை இல்லை'' என்று பாலசந்தர் சார் சொன்னதும் எங்களுக்கெல்லாம் ஒரே அதிர்ச்சி! பொதுவாகவே சண்டைக் காட்சி என்றால் முன்னெச்சரிக்கையுடன் பாதுகாப்பு ஏற்பாடுகளைச் செய்துகொள்வோம். 'சண்




டைப் பயிற்சியாளர் ஜூடோ ரத்தினமும், மற்ற ஸ்டண்ட் நடிகர்களும் மிகுந்த அனுபவசாலிகள். ரஜினிக்கு எந்தவிதமான ஆபத்தும் வராமல் கவனமாக இருப்பார்கள். சில குளோஸ்-அப் காட்சிகளில் முகத்தில் தீப்பொறி படாதவாறு நடுவில் கண்ணாடியைப் பயன்படுத்துவோம்' என்று எடுத்துச் சொன்னேன். ஆனாலும் அவருடைய கவலை முழுசாகத் தீரவில்லை.

ஒரு கட்டத்தில், அவர் இங்கே தொடர்ந்து இருந்தால் ரொம்பவே டென்ஷன் ஆகிவிடுவார் என்று தோன்றவே, அவரை அனுப்பிவிட்டு, படப்பிடிப்பைத் தொடர்ந்தோம். சிஷ்யன் மீது குருவு கொண்டிருந்த அக்கறை கலந்த பாசம் புரிந்தது.

கவிதாலயாவுக்காக ரஜினி நடிக்க, நான் இயக்கிய 'வேலைக்காரன்' படத்தில் ரஜினிக்கு ஆக்ஷனுடன், காமெடி இணைந்த கதாபாத்திரம். அதில் இன்டர்வியூவுக்கு வரும் ரஜினி, நாசரிடம் பேசும் இங்கிலீஷ் வசனங்கள் தியேட்டரையை மிகுந்த கலகலப்பாக்கி விடும். அந்த அளவுக்கு சூட்டபரான காமெடி. அந்த காமெடி வசனங்களை எல்லாம் பாலசந்தர் சாரே அமைத்துக் கொடுத்தார்.

வேலைக்காரன் படம் ஓர் ஓட்டலில் நடைபெறும் கதை என்பதால், சென்னையில் மட்டுமில்லாமல் ஆக்ரா, ஸ்ரீநகர், டெல்லி என்று இந்தியாவின் பல முக்கிய நகரங்களில் உள்ள நட்சத்திர ஓட்டல்களில் எல்லாம் படப்பிடிப்பு நடத்தினோம்.

காஷ்மீரில் ஒரு பாடல் காட்சியைப் படம் பிடிப்பதற்காக நாங்கள் சென்ற




போது, அங்கே கடுமையான பனிக்காலம். எங்கு பார்த்தாலும் வெள்ளைப் பனி மயம். படப்பிடிப்பு யூனிட்டில் மற்ற அனைவரும் கம்பளி உடை, கோட்டு, ஸ்பெஷல் பூட்ஸ் எல்லாம் அணிந்து குளிர் தெரியாத படி பாதுகாப்புடன் படப்பிடிப்புக்குச் சென்றோம். பனி படர்ந்த மலைப் பகுதியில் ரஜினி, அமலா இருவருக்கும் பாடல் காட்சி. அமலாவுக்கு பரத நாட்டிய உடை. அதனால், காலில் எந்தவிதமான



● வேலைக்காரன் படத்தில் ரஜினி - அமலா



காலணியும் அணியமுடியாது. குளிரில் கால்கள் சில்லிட்டன. அடிமேல் அடி எடுத்து வைத்து நடக்க மிகவும் சிர மப்பட்டார். பனித்தரையில் நின்று நடனம் ஆடுவார். நான் 'கட்' சொன்னவுடன், ரஜினி கால்களில் அணிந்திருந்த பூட்ஸ் களின்மீது அமலா தன்னுடைய கால்களை வைத்து, நின்று கொள்வார். பாடல் காட் சியை எடுத்து முடித்தபோது, அமலா,

''சார் நான் பரதநாட்டியம் கற்றுக்கொண்ட சமயத்தில் இதுபோல பனியில் கால் நடுங்க ஆடும் சூழ்நிலை வருமென கனவில்கூட நினைத்துப் பார்த்தது கிடையாது'' என்று சொல்லிச் சிரித்தார். அவ்வளவு கஷ் டப்பட்டு எடுத்த அந்தப் பாடல் பெரிய அளவில் ஹிட் ஆனது.

'வேலைக்காரன்' நூறு நாட்கள் ஓடிய ஒரு வெற்றிப்படம். அதன் நூறாவது நாள் விழா வில் கலந்துகொண்டு வாழ்த்திப் பேசிய வர், பெரியவர் சிலம்புச் செல்வர் ம.பொ.சி. அவர் பேசும்போது, ''எனக்கு அதிகமா ஆங்கில அறிவு கிடையாது. என் பேரனிடம், ரஜினி என்னவோ இங்கி லீஷ்ல வசனம் பேசுறாரே! அதுக்கு

## ரசிகர் மன்ற ராஜாக்கள்



**செ**ன்னை அசோக் நகரைச் சேர்ந்த விணோத், தீவிர ரஜினி ரசிகர். கடந்த ஏழு வருடங்களாக ரஜினி நற்பணி மன்றத்தைத் தொடர்ந்து' நடத்தி வருகிறார். ''ரஜினிக்கு பிறந்த நாள் வந்து விட்டால் போதும் ஏழைக் குழந்தைகளுக்கு நோட்டு, புத்தகம், ஆடைகள் என்று சொந்தச் செலவில் வாங்கிக் கொடுப்பேன்'' என்கிறார் விணோத். ரஜினி அரசியலுக்கு வருவாரா என்றால், ''நிச்சயம் வருவார். அந்தப் பொன்னான நாளுக்காக நான் மட்டுமல்ல, என்னைப் போன்ற லட்சக்கணக்கான ரஜினி ரசிகர்கள் ஒவ்வொருவரும் காத்திருக்கிறோம். அவர் அரசியலுக்கு வந்து சமூகப் பணி ஆற்ற வேண்டும் என்பதே எங்கள் ஆசை'' என்கிறார் விணோத்.

என்னடா அர்த்தம் என்று கேட்டேன். அவன், 'ரஜினி இங்கிலீஷ் ஒரு தனி ஸ்டைலு. அது உங்களுக்குப் புரியாது! போங்க தாத்தா!'ன்னு சொல்லிட்டான்'' என்று சொன்னதும் அரங்கத்தில் பலத்த கைத்தட்டல்.

**எ**னது தாய்வீடான ஏவி.எம். நிறு





வனத்துக்காக ரஜினி, கமல் இருவரையும் இயக்கியது போலவே, கவிதாலயா நிறுவனத்துக்காக இருவரது படங்களையும் இயக்கும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. ரஜினி நடித்த 'வேலைக்காரன்', கமல் நடித்த 'எனக்குள் ஒருவன்' ஆகிய படங்கள்தான் அவை. முன் பிறவி நினைவு வரும் மனிதனின் கதை எனக்குள் ஒருவன். அதில் முந்தைய பிறவியில் கமல் ஒரு நேபாளி. எனவே, நேபாளியாக வரும் காட்சிகளில் கமல் எடுத்துக்கொண்ட சிரத்தையைக் குறிப்பிட்டே ஆகவேண்டும். சிறிது நேரம் நம் கண்களை விரித்துப் பிடித்துக்கொண்டிருந்தாலே நமக்குக் கண்கள் வலிக்கும். ஆனால், கமல், மணிக்கணக்கில், கண்ணுக்கு அருகில் உள்ள தோல் பகுதியை இழுத்து ஒட்டிக்கொண்டு இருப்பார். அத்துடனே சண்டைக்காட்சிகளிலும் பாடல் காட்சிகளிலும் நடிப்பார்; அது கமலுக்கு ஒப்பனையில் உள்ள ஈடுபாடு.

மலைகளுக்கு நடுவில் கம்பியில் தொங்கும் வின்ச்சில் ஒரு சண்டைக் காட்சியைப் படம் பிடித்தோம். அதில் கமலுக்குப் பதிலாக ஒரு டூப்பை வின்ச் கம்பியில் தொங்கிக்கொண்டுவரும்படி ஸ்டண்ட் மாஸ்டர் சூப்பர் சுப்பராயன் ஏற்பாடு செய்திருந்தார். கேமரா ஓட ஆரம்பித்தது. எங்களுக்கெல்லாம் ஒரே அதிர்ச்சி. டூப்புக்குப் பதிலாக கமலே வின்ச்சில் தொங்கியபடி வந்தார். கீழே அறுநூறு அடி பள்ளத்தாக்கு, கரணம் தப்பினால் மரணம்தான். ஆனால், கமல் அதைப்பற்றி எல்லாம் கவலைப்படாமல், தாமே அந்தக் காட்சியில் நடித்துவிட்டார். எங்களை எல்லாம் பதைபதைக்க வைத்துவிட்டார்.

கவிதாலயாவுக்காக நான் இன்னொரு படம் இயக்கினேன். அந்தப் படம், என்னை என்னுடைய வாழ்நாளிலேயே முதல் முறையாக கோர்ட் படி ஏற வைத்துவிட்டது. அந்தப் படம்?

*(பயணம் தொடரும்)*

***எழுத்து வடிவம் : எஸ்.சந்திரமௌலி***

# கல்கி சதாசிவம் நினைவு அறக்கட்டளை



## கல்கி சதாசிவம் நினைவுச் சொற்பொழிவு;
## கல்கி சதாசிவம் நினைவு விருது
## வழங்கும் விழா

- 2007 ஆம் ஆண்டில் தமிழ் இதழ்களில் வெளியான கலைநயமும், சமுதாய நோக்கும் இணைந்த தலைசிறந்த விளம்பரத்துக்கான விருது வழங்குதல்,
- படிப்பில் சிறந்த, பொருளாதாரத்தில் பின்தங்கிய மாணவர்களுக்குக் கல்வி உதவித் தொகை வழங்குதல்.

*தலைமையுரை :*

**திரு. வி.கிருஷ்ணமூர்த்தி**

(Chairman, National Manufacturers' Competitiveness Council)

*கல்கி சதாசிவம் நினைவுச் சொற்பொழிவு :*

**மீடியா மற்றும் விளம்பரங்களில் பெண்கள் சித்திரிப்பு**

பேருரை: **திருமிகு கீதா ராமசேஷன்**

(முன்னணி வழக்குரைஞர், சமூகத் தொண்டர்)

நாள் : **30.03.08, ஞாயிற்றுக்கிழமை.**
நேரம் : **மாலை 6 மணி**
இடம் : **பாரதிய வித்யாபவன் அரங்கம்,**
**மயிலாப்பூர், சென்னை - 600 004**

---

*அனைவரும் வருக!*

# தூறல்!

**நா**ம் உட்கார்ந்து பேசிய நதிக்கரையில்
இப்போது நிரம்பி வழிகிறது
வெறுமை!

- தஞ்சை கமருதீன்

**மா**தம் ஒரு நாள்
காணாமல் போகும் வெண்ணிலா
ஊடல் கொள்ளச் செல்கிறதோ அமாவாசையன்று!

-வி.கே.லக்ஷ்மிநாராயணன்

**ம**ழை வந்து
குளிப்பாட்டிய பிறகு
மலை இன்னும் அழகு

- கே.பி.ஜனா

**அ**ப்பாவுக்குச் செய்திகள்
அம்மாவுக்கு சீரியல்
அண்ணனுக்கு கிரிக்கெட்
தம்பிக்கு கார்ட்டூன்...
டீவி.யைச் சீதனமாய்
வாங்கித் தந்த தாத்தாவுக்கு
கிராமத்தில் டீக்கடை பெஞ்ச்...

- முத்துவேல்

**வ**ழி தவறி வந்து பெய்துவிட்ட
நகரத்து மழை
கொண்டு வரவேயில்லை
தவளைகளின் சங்கீதத்தை!

- பெ.பாண்டியன்

# இந்தியாவை விட எத்தியோப்பியா மேல்?!

**-எஸ்.பி.சாய்நாத் உருக்கம்**



''அம்பானி சகோதரர்களின் வருமானம் நிமிடத்துக்கு நாற்பது லட்சம் என்று புள்ளிவிவரம் சொல்கிறது. ஆனால், இந்தியாவின் விவசாயக் கூலித் தொழிலாளியின் தினக்கூலி, எட்டு வருடத்துக்கு ஒருமுறை பெரும் போராட்டத்துக்குப் பிறகு அதிகரிக்கப்படுகிறது. இந்திய மக்கள் தொகையில் 83 கோடிப் பேர் தினமும் இருபது ரூபாய் கூலிபெற்று, தங்கள் வாழ்க்கையை நடத்த வேண்டிய கஷ்டமான நிலைமையில் இருக்கிறார்கள்'' என்று குறிப்பிட்டார் மூத்த பத்திரிகையாளரான பி.சாய்நாத். லயோலா கல்லூரியின் வரலாற்றுத்துறையின் பொன் விழாவையொட்டி சிறப்புரையாற்றிய சாய்நாத்தின் சொற்பொழிவிலிருந்து சில துளிகள்:

உலகில் பசிக் கொடுமை அதிகமாக இருக்கும் 130 நாடுகளில் இந்தியாவுக்கு 94ஆம் இடம். இந்த நாடுகளில் பசிக் கொடுமையை ஒழிக்க எடுக்கப்படும் நடவடிக்கைகளின் அடிப்படையில் அமைந்த வேறு ஒரு பட்டியலில், எத்தியோப்பியாகூட நம்மைவிட மேம்பட்ட நிலையில் இருக்கிறது.

இந்த பட்ஜெட்டில் அறிவிக்கப்பட்டுள்ள கடன் ரத்து, நாட்டுடைமையாக்கப்பட்ட மற்றும் கூட்டுறவு வங்கிகளில் வாங்கிய கடனுக்கு மட்டுமே பொருந்தும். அண்மையில் பாரத ரிசர்வ் வங்கி ஏற்பாடு செய்திருந்த கூட்டத்தில், நான் இந்தியாவின் கிராமப்புறங்களில் புழக்கத்தில் இருக்கும், மக்களை மீளாத் தொல்லையில் வீழ்த்தும் எட்டு வகையான கடன் வகைகளைப் பற்றிக் குறிப்பிட்டபோது, ரிசர்வ் வங்கி உயர் அதிகாரிகளே, 'இப்படியெல்லாம் கூட கிராமங்களில் கடன் வழங்கப்படுகிறதா?' என்று அதிர்ந்துபோனார்கள்.

உலகமயமாக்கல், பொருளாதார சீர்திருத்தம் என்ற பெயர்களில், நம் விவசாயிகளின் நலன் புறக்கணிக்கப்படுகிறது. நவ நாகரீக சூப்பர் மார்க்கெட்டில் காய்கறி வாங்குகிறீர்கள் என்றால், நீங்கள் உங்கள் தெருவில் தலையில் சுமந்து கீரை விற்கும் பெண்மணியின் ஒரு வேளை சாப்பாட்டைப் பிடுங்கிக் கொள்கிறீர்கள் என்று அர்த்தம். நீங்கள் எதை வாங்கும்போதும், இது ஏழை விவசாயியின் வாழ்க்கையைப் பாதிக்குமா? என்று உங்களையே ஒருமுறை கேட்டுவிட்டு, பாதிக்கும் என்றால் அதனை வாங்காமல் புறக்கணியுங்கள்.

> **நவ நாகரீக சூப்பர் மார்க்கெட்டில் காய்கறி வாங்குகிறீர்கள் என்றால், நீங்கள் உங்கள் தெருவில் தலையில் சுமந்து கீரை விற்கும் பெண்மணியின் ஒருவேளை சாப்பாட்டைப் பிடுங்கிக் கொள்கிறீர்கள்.**

மும்பையில், லேக்மே ஃபேஷன் வீக் நடந்தபோது, அங்கே 506 பத்திரிகை மற்றும் தொலைக்காட்சி நிருபர்கள் வந்திருந்தார்கள். ஆனால், மும்பையிலிருந்து நூறு கிலோ மீட்டர் தொலைவில், விதர்பா பகுதியில் அதே சமயத்தில் நடந்த விவசாயிகள் தற்கொலை பற்றி எழுத வந்த நிருபர்கள் வெறும் ஆறு பேர்தான்'' என்றார் சற்றே உருக்கமாக!



**தொகுப்பு : மௌலி**

• **அனன்யா, பெங்களூர்**

***கன்னத்தில் குழி விழுந்தால் அதிர்ஷ்டமாமே...! உண்மையா கிரேஸி?***

மகாபலிபுரம் போகும் வழியில் திருவிடந்தை என்ற ஊரில் 'நித்திய கல்யாண பெருமாள்' இருக்கிறார். இவர் ஏதோ ஒரு ரிஷிக்குக் கொடுத்த வரத்தைக் காப்பாற்ற, அந்த ரிஷியின் 365 பெண்களையும், தினம் ஒரு பெண் என மணந்து, வருடம் முழுக்க கல்யாணக் கோலத்தில் இருப்பார். திருமணத்தின்போது மாப்பிள்ளைக்குக் கன்னத்தில் திருஷ்டிப் பொட்டு இடுவது வழக்கம். 365 நாட்களும் திருஷ்டிப் பொட்டு இட்டதில் பெருமாளின் குண்டுக் கன்னத்தில் குழியே விழுந்துவிட்டது. குண்டும் குழியும் கண்ணுக்கு வெளிச்சமாக இருக்கும் உத்சவரைப் போய்ப் பாருங்கள். கல்யாண அதிர்ஷ்டம் இருந்ததால் பெருமாளுக்குக் கன்னத்தில் குழி விழுந்தது. கன்னத்தில் குழி விழுந்தால் அதிர்ஷ்டம் வருமா என்றால்? பள்ளிக்கூடம் படிக்கும்போது, என் வகுப்பில் பெருமாள் என்று ஒரு பையன் இருந்தான். அவன் கன்னத்தில் 'இவ்விடம் ஆட்கள் வேலை செய்கிறார்கள்' என்று போர்டு போடும் அளவுக்கு குழி விழுந்திருக்கும். மழை பெய்தால், பெருமாளின் கன்னக்குழியில் தண்ணி தேங்கும். ஆனால், பாவம், வகுப்பில் யார் தப்பு செய்தாலும், தமிழ் வாத்தியார் கைக்கு எட்டிய தூரத்தில் இருக்கும் பெருமாளின் கன்னத்தில்தான் பேயறை அறைவார். தமிழ் வாத்தியார் பெயர் 'லக்கு'மணன். பெருமாளுக்கு இப்படியாக அதிர்ஷ்டம் (luckகுமணன்) அடிக்கும். கிளரொளி இளமையில் கன்னத்தில் குழி விழுந்தால் 'லக்கு'... கிழமான பின்பு விழுந்தால் அது 'டொக்கு'... சமீபத்தில் பள்ளி நண்பன் பெருமாளை, மாம்பலத்தில் பார்த்தேன். கன்னத்தில் குழி மாம் பள்ளமாக இருந்தது. குபேர யந்திரம், வாஸ்து பொம்மை, அதிர்ஷ்ட கவசம் விற்றுக்கொண்டிருக்கிறான். கூட அவன் பையன் நவநீதன்... நவநீதன் கன்னத்தில் அரண்மனை அகழி லைசக்கு குழி!

• **என்.கோமதி, நெல்லை**

***கடவுள் முதலில், உலகைப் படைத்த போது இருட்டாக இருந்ததா? வெளிச்சமாக இருந்தா?***

அது அந்த இருட்டாம் போக்கு இறைவனுக்கே வெளிச்சம்.

• **எம்.அசோக்ராஜா,**

**அரவக்குறிச்சிப்பட்டி**

***நல்ல மனைவி அமைவது, நல்ல நண்பன் அமைவது... எது உயர்வு?***

நல்ல மனைவி, இறைவன் கொடுத்த வரம்; நல்ல நண்பன் இறைவன்!

• **பி.சிவா, பாளையங்கோட்டை**

***ஆபத்தில் உதவி செய்கிறவர்கள் தெய்வம்தானே?***

நாம் ஆபத்தில் இருக்கும்போது உதவி செய்பவர்கள் guard... தான் ஆபத்தில் இருந்தாலும், அதைப் பொருட்படுத்தாமல் நமக்கு உதவி செய்பவர்கள் God!

• **மீனா ரெங்கனாநாதன்,**

**மேற்கு மாம்பலம்**

***கிளி போன்ற பெண்கள், குரங்கு போன்ற ஆண்களைக் காதலிப்பதேன்...?***

இந்தக் குரங்கு கடைசி வரையில்



# கன்னத்தில் குழி விழுந்தால் அதிர்ஷ்டமா?



நம்மைக் கைவிடாமல் காப்பாற்றும் என்று ஒருவேளை அந்தக் கிளிக்கு ஜோஸ்யம் தெரிந்திருக்கும்...!

● ***த.சத்தியநாராயணன், அயன்புரம்***

***அல்பத்தனம், கஞ்சத்தனம்... என்ன வித்தியாசம்?***

அர்த்த ராத்திரியில் குடை பிடிப்பவன் அல்பன்; அந்தக் குடையின் கீழே ஒளியில் ஒதுங்க, அர்த்த ராத்திரியில் கண் முழிப்பவன் கஞ்சன்.

● ***விக்கிரமாதித்தன், ஜேடர்பாளையம்***

***அமைதியான வாழ்க்கையை எப்படி அமைத்துக்கொள்ள வேண்டும்...?***

சத்தம் போடாமல்...!

● ***ஜெ.துரைராஜ், சென்னை***

***சுவாமி விவேகானந்தர் சொல்லும் செய்தி என்ன...?***

விவேகானந்தர்தான் செய்தி (message)... இந்தச் செய்தியை தூரதர்ஷனில் கண்டு சொன்னவர் ராமகிருஷ்ண பரமஹம்சர்.

● ***மு.ரா.பாலாஜி, கோலார் தங்கவயல்***

***உங்களால் விட முடியாத தொட்டில் பழக்கம் எது...?***

Infact நம் யாராலும் விட முடியாத தொட்டில் பழக்கம் தூக்கம்...!

● ***கா.சங்கர், சாலை அகரம்***

***எதை நினைத்து வருத்தப் பட்டதுண்டு...?***

பல சமயங்களில் 'அடடா... இப்படித் தேவையில்லாமல் வருத்தப்பட்டோமே!' என்பதை நினைத்து நினைத்து வருத்தப் பட்டதுண்டு.

● ***ஆர்.ராஜலட்சுமி, விழுப்புரம்***

***சிரிச்ச முகமா இருந்தா, இளிச்ச வாயன்னு சொல்லிடறாங்களே...?***

உம்மணாமூஞ்சி - நோயாளாக இருப்பதை விட இளிச்ச வாயனாக இருப்பது எவ்வளவோ பெட்டர்.

● ***டி.முருகேசன், திருவாரூர்***

***பகல் தூக்கம் நல்லதா..?***

முற்பகல் முழிப்பின் பிற்பகல் தூக்கம்... திருடனுக்கும், நைட் ஷிஃப்ட் காரர்களுக்கும் பகல் தூக்கம் அவசியம்... மற்றவர்களுக்கு நல்லது, ஊரோடு ஒத்து உறங்குவதே... அடடே பொழுது விடிஞ்சிடுச்சா...! குட் நைட் சார்!



# திரும்பக்

''பற்றியெரியும் தீகூட எங்களை ஒன்றும் செய்திட முடியாது. எங்கள் தாய் மண்ணில் எங்களது சகோதரர்களும் சகோதரிகளும் உயிர்விட்டுக் கொண்டிருக்கும்பொழுது எங்களால் இங்கே எப்படி நிம்மதியாக இருக்க முடியும்? எங்களால் முடிந்த வரை, எங்கள் காலம் முடியும்வரை எங்கள் நாட்டுக்காகப் போராடுவோம்'' என ஒரே குரலில் கூறுகிறார்கள் டெல்லி வாழ் திபெத்தியர்கள்.



திபெத்திய தலைநகரான லாசாவில், சீனர்களின் ஆக்கிரமிப்பை எதிர்த்து நடந்த போராட்டத்தில், நூற்றுக்கணக்கான திபெத்தியர்களை சீனா கொன்று குவித்துவிட்டதாகச் செய்திகள் வந்துகொண்டிருக்கையில், டெல்லியில் திபெத்தியர்கள் நடத்தி வரும் போராட்டம் டெல்லியை மட்டுமல்லாமல், இந்தியாவையே சற்று ஸ்தம்பிக்க வைத்திருக்கிறது!

'எங்கள் திபெத்தை எங்களிடமே திருப்பிக் கொடுத்திடுங்கள்' என்று திரும்பிய பக்கமெல்லாம் சாந்தமாக, ஆனால், அழுத்தமாகக் குரல் கொடுத்துக்கொண்டிருக்கிறார்கள் திபெத்தியர்கள். மார்ச் 10, திபெத்தியர்களின் அரசியல் வரலாற்றில் மறக்க முடியாத நாள். பல லட்சம் திபெத்தியர்கள், உலகமெங்கும் 'அகதிகளாக' வாழ்ந்து வருகிறார்கள். இந்தியத் தலைநகர் டெல்லியில் மட்டுமே சுமார் ஆயிரத்துக்கும் மேற்பட்ட திபெத்திய குடும்பங்கள் வாழ்ந்துகொண்டிருக்கின்றன.

கோல்மா என்ற திபெத்தியப் பெண், ''எனது பெற்றோர்கள் திபெத்தை விட்டு 49 வருடங்களுக்கு முன்பே வெளியேறிவிட்டார்கள். என் பெற்றோர் சாலை துப்புரவு வேலை செய்து, மூட்டை தூக்கி, விவசாயம் பார்த்து என பல விதங்களிலும் மிகக் கடுமையாக உழைத்து என்னையும் என் கூடப் பிறந்தவர்களையும் படிக்க வைத்தார்கள். எங்களது ஒரே வேண்டுகோள் திபெத்திய கலவரம் நிறுத்தப்பட்டு, அங்கே அமைதி திரும்ப வேண்டும் என்பதே. எங்கள் நாட்டை சீனர்களிடம் இழந்துவிட்டோம். சீனத் தலைநகரான பெய்ஜிங்கில் ஒலிம்பிக் போட்டி நடத்த நாங்கள் ஒரு போதும் விடமாட்டோம்'' என்கிறார்.




# கிடைக்குமா திபெத்?!

டெல்லியில் எம்.பி.ஏ. படித்துக் கொண்டிருக்கும் டென்ஸி நோர்யா என்ற இளம் பெண் ''எங்கள் போராட்டம் வெறும் 49 ஆண்டுகள்தான் நடந்திருக்கிறது. எனது இறுதி மூச்சு நிற்பதற்குள் திபெத்துக்கு சுதந்திரம் கிடைப்பது உறுதி'' என கண்களில் நம்பிக்கை கொப்பளிக்கப் பேசுகிறார். ''உலக நாடுகள் அனைத்தும் சேர்ந்து, திபெத்தை விட்டு வெளியேறுமாறு சீன நாட்டை கேட்டுக்கொள்ள வேண்டும். திபெத்தை நோக்கி நாங்கள் நடைப்பயணம் தொடர நினைத்தாலும் எங்களால் திபெத்திய எல்லையைத் தொட முடியாத ஒரு நிலையில் இருக்கிறோம். எங்களால் ஏன், எங்கள் நாட்டுக்குள் நுழைய முடியவில்லை? எங்கள் நாட்டைத் தொட எங்களுக்கு உரிமை இல்லையா? பெய்ஜிங்கில் நிச்சயம் ஒலிம்பிக் போட்டி நடக்கக் கூடாது. திபெத்தில் சுதந்திரம் என்பது சுத்தமாக இல்லை. அங்கே சுதந்திரக் காற்று கிடைக்கும் வரை நாங்கள் ஓய மாட்டோம்'' என்கிறார் வேதனையாக.

**லோ**ப்ஸாங் என்ற இளைஞர் தமது உடலில் திபெத்திய கொடியை வரைந்து கொண்டிருக்கிறார்! ''ஆயிரக்கணக்கான திபெத்தியர்கள் இந்தப் போராட்டத்தில் பலியாகிவிட்டார்கள். அவர்களது ஆன்மா சாந்தியடைய நாங்கள் அனைவரும் ஒன்றுகூடி 'தோமா' என்ற பிரார்த்தனைப் பாடலைப் பாடிக்கொண்டிருக்கிறோம். திபெத்துக்கு சுதந்திரம் கிடைக்க நாங்கள்



அனைவருமே போராடுவோம்'' என்கிறார் அந்த இளைஞர்.

டெல்லியில் திபெத்தியர்களால் நடத்தப்பட்டு வரும் பல கடைகளும், உணவகங்களும் மார்ச் 10 முதல் மூடியே கிடக்கின்றன. அனைவரும் சேர்ந்து தங்கள் நாட்டுக்காக அமைதியாகப் போராடும் முயற்சியில் தீவிரமாக இறங்கியிருக்கிறார்கள்.

- **நளினி**

**ம**துரையில் நடந்த ச.ம.க. மாநாட்டுக்குப் பிறகு கறுகறுவென தமிழகத்தைச் சுற்றி வருகிறார் சரத்குமார். பாராளுமன்றத் தேர்தலுக்கு இப்போதே தயாராகிவிட்ட நாற்பது தொகுதிகளின் ஜாதகங்களை தீவிரமாக அலசி, ஆராய தனியார் ஏஜென்ஸி ஒன்றைக் கேட்டுக் கொண்டிருக்கிறாராம். சுற்றுப் பயணத்தில் கிடைத்த ஒருநாள் இடைவெளியில் சரத்குமாரைச் சந்தித்தோம்.



# ''யாரும் என்னைத்

**தேர்தல் தேதி தெரியாத நிலையில் நாற்பது தொகுதிக்கும் வேட்பாளர்கள் தயார் என்கிறீர்களே?**

''எங்கள் கட்சியில், வேட்பாளராவது என்பது ஒரு நீண்ட நடைமுறை ஆகும். ஒரு தொகுதிக்கு நிறைய பேர் விருப்பம் தெரிவிப்பதால், ஒவ்வொருவருடைய பின்னணி, நேர்மை, தியாகம், பொதுப் பணியில் ஆர்வம் ஆகியவற்றைப் பற்றி தீவிரமாகத் தெரிந்துகொள்ளவும், விசாரிக்கவும் வேண்டியிருக்கிறது. அடுத்து கட்சியைப் பற்றி, அதன் கொள்கைகள் பற்றி எப்படிப்பட்ட புரிதலுடன் இருக்கிறார் என்பதெல்லாம் நேர்முகத் தேர்வில் கணிக்கப்படும். ச.ம.க. முழக்கமான 'மாற்றத்தை நோக்கி' செயல்வடிவம் பெற வேண்டுமென்றால் சமுதாயத்தில், எப்படிப்பட்ட மாற்றங்கள் தேவை என்பதை எங்கள் வேட்பாளர் திருப்தி தரத்தக்க அளவில் விளக்கும் வல்லமை பெற்றிருப்பார். பல கட்டங்களில் வேட்பாளர் தேர்வு நடந்து வருகிறது. **தேர்தல் அறிவிக்கப்பட்டால் முதல் வேட்பாளர் பட்டியல் எங்களுடையதாகத்தான் இருக்கும்.''**

**கூட்டணி கண்டிப்பாகக் கிடையாதா?**

''கூட்டணி யுகம் நிலைத்து நின்றுவிட்டதென்று சொல்வதை என்னால் ஒப்புக்கொள்ள முடியாது. நமது கொள்கைகள், செயல்பாடுகள் மூலம், மக்களின் பேராதரவைப் பெற்று, தனிக்கட்சி ஆட்சிக்கு வரமுடியும் என்று உறுதியான நம்பிக்கை எனக்கு இருக்கிறது. அணுசக்தி ஒப்பந்தத்தையே எடுத்துக் கொள்ளுங்கள். பிரதமர் அமெரிக்காவுடன், துவக்கக் கட்ட பேச்சுவார்த்தையில் ஒப்புக்கொண்டு கையெழுத்து போட்டுவிட்டார். ஆனால், ஒப்பந்தம், கூட்டணிக் கட்சிகளின் நிர்பந்தம் காரணமாக செயல்வடிவம் பெற முடியவில்லை. அப்புறம் பிரதமர் கையெழுத்துக்கு என்ன மரியாதை; மற்ற நாடுகள் எப்படி நம்மை மதிக்கும்?''

**தனித்துப் போட்டியிட்டுத் தோற்றால் கட்சியே ஆட்டம் காணுமே**

"நீங்கள் ஏன் தோல்வியைப் பற்றி பேசுகிறீர்கள்? தேர்வில் ஆகட்டும்; தேர்தலில் ஆகட்டும், நமது நோக்கம் வெற்றி என்பதாகவே இருக்க வேண்டும்."

**தேர்தலில் வோட்டுக்களைப் பிரிக்கவே கருணாநிதி, உங்களைத் தனிக்கட்சி துவங்கத் தூண்டியிருக்கிறார் என்றும் ஒரு குற்றச்சாட்டு வைக்கப்படுகிறதே?**

"மற்றவர்கள் என்னைப் பயன்படுத்திக் கொள்ள ஒரு போதும் அனுமதிக்கமாட்டேன். அதேசமயம் மற்றவர்கள் கருத்தையும் கேட்டுக்கொள்வேன்; என்னை யாரும் இயக்கவும் முடியாது. தூண்டவும் முடியாது."

**இலவச மின்சாரம் கொடுப்பது மலிவான அரசியலா என்று கருணாநிதி கேட்கிறாரே?**

"உற்பத்திக்கு உதவாத இனங்களான கலர் தொலைக்காட்சிப் பெட்டி, அடுப்பு ஆகியவற்றைத் தேர்தல் ஆதாயமாகக் கருதி இலவசமாகக் கொடுப்பதுதான் தவறு. விவசாயம் தொழில், வேலை வாய்ப்பு, பிரகாசமாக இருக்குமேயானால் மக்களே, இவற்றை வாங்கிக் கொள்வார்களே. அப்படிப்பட்ட நிலையை ஏற்படுத்த வேண்டியது அரசின் பொறுப்பு. கட்டடம் கட்டும்போது சாரம் கட்டுவது போல, கட்டடம் முடியும்போது சாரத்தை லாகவமாக எடுப்பதுபோல, விவசாயிகள், வாழ்க்கைத் தரம் முன்னேறும்போது, இலவசங்களையும் எடுத்து விடுவதைப் பற்றி யோசிக்கலாம். மண்வளம் மற்றும் அதற்கேற்ற பயிர், நீர் நிர்வாகம் போன்றவற்றைப் பற்றிய விழிப்புணர்வை ஏற்படுத்துவது இன்னமும் பலன் கொடுக்கும்."

**'கட்சியில் சரத்தைத் தவிர யாரிடமும் சமத்துவம் இல்லை' என்று உங்கள் கட்சியைச் சேர்ந்த இளைஞரணி பிரமுகர் அறிக்கை விட்டிருக்கிறாரே?**

"என் அன்புக்குப் பாத்திரமான அந்தத் தோழர் என் நீண்ட நாள் ரசிகர். உள்ளூர் கட்சிக் குளறுபடி காரணமாகக் கொஞ்சம் மனத்தாங்கல் பதற்றத்தில் அறிக்கை விட்டுவிட்டார். மற்றபடி பிரச்னை தீர்ந்தது."

**கட்சிக்கொரு தொலைக்காட்சி என்றாகிவிட்ட நிலையில் தமிழ்நாட்டில் ச.ம.க. தொலைக்காட்சி எப்போது?**

"எங்களுக்கு அச்சு மற்றும் காட்சி ஊடகங்கள் நல்ல ஆதரவைக் கொடுத்து வரும் நிலையில், அப்படியொரு எண்ணம் இல்லை."

– ப்ரியன்

> "தேர்தல் அறிவிக்கப்பட்டால் முதல் வேட்பாளர் பட்டியல் எங்களுடையதாகத்தான் இருக்கும்."

# "தூண்டிவிட முடியாது!"

## – சீறுகிறார் சரத்குமார்



'அழகிய தீயே', 'மொழி' திரைப் படங்கள் மூலம் வசனங்களுக்காக தனித்துப் பாராட்டப்பட்டவர் 'வெள்ளித்திரை' இயக்குநர் விஜி. நகைச்சுவை நழுவாத, அதேசமயம் ஆபாசம் கலவாத வசனங்களால் கைதட்டல் பெறும் இவருக்குச் சொந்த மண் தஞ்சாவூர். 'வெள்ளித்திரை' வெளிவந்து வெற்றிகரமாக ஓடிக் கொண்டிருக்கும் வேளையில் நம்மோடு பேசினார்... இனி அவரோடு....

''சினிமாவில், இயக்குநர்கள் ஒவ்வொருவருக்கும் தனித்தனி திறமை இருக்கும்; இருக்கணும். பாலுமகேந்திரா படங்கள்ல ஃபோட்டோகிராஃபி பேசப்படும். பாரதிராஜா படத்துல நேட்டிவிட்டி மணக்கும். பாக்யராஜ்னா ஸ்க்ரீன் ப்ளேவும்தான் நமக்கு நினைவுக்கு வரும். அதுபோல, என் படங்கள்ல வசனங்கள் தனித்துப் பேசப்படணும்னு விரும்பறேன். வரலாற்றைப் புரட்டிப் பார்த்தீங்கன்னா, ஒரு சின்ன வார்த்தைதான் பெரிய பிரளயத்துக்கே காரணமாக இருந்திருக்கு. சொல்லக்கூடாத வார்த்தையைச் சொன்னதுக்காக, பல வருஷங்கள் பேசிக்காம இருந்தவங்களையெல்லாம் பார்த்திருக்கேன். அதனால, என்னோட படங்கள்ல வசனங்களுக்கான வார்த்தைகளைப் பயன்படுத்தும்போது நகைச்சுவை நழுவாம, ஆபாசம் கலக்காம பார்த்துக்கறேன். அதுக்குக் காரணமே நான் பிறந்த தஞ்சாவூர் மண்ணும், படிச்ச புத்தகங்களும்தான். பொதுவாகவே தஞ்சாவூர்க்காரங்களுக்குக் குசும்பு ஜாஸ்தி. அந்தப் பாதிப்புதான் என் படத்தோட வசனங்கள்லயும் பிரதிபலிக்குது. வசனங்கள்ல வார்த்தைகளைக்

# “பிரகாஷ்ராஜ்



கவனமா பிரயோகிக்கறேன்'' என்ற இயக்குநர் விஜியிடம் 'வெள்ளித் திரை அனுபவங்களைச் சொல்லுங்கள்' என்றால், மனிதர் சிறிது நேர யோசனைக்குப் பிறகு கவனமாகப் பேசுகிறார்.

## —வேதனையில் இயக்குநர் விஜி!

“‘அல்லித்தந்த வானம்’ படத்துக்குப் பிறகு படம் டைரக்ட் பண்ணாம வசனங்கள் எழுதறதுலேதான் கொஞ்சம் கவனம் செலுத்தினேன். எனவே, நல்ல படங்களை டைரக்ட் பண்ணலாமேன்னு யோசிச்சுக்கிட்டு இருந்த நேரத்துல பிரகாஷ்ராஜ் கூப்பிட்டு, ‘உதய நானு தாராம்’ங்கற மலையாளப் படத்தை ரீமேக் பண்ணலாம்னு சொன்னார். ஆனா, அந்தப் படத்துக்கு நான் வசனங்கள் எழுதலாம்னுதான் போனேன். எல்லாருமே என்னை நிர்ப்பந்தப்படுத்தி டைரக்ட் பண்ண வைச்சுட்டாங்க. பிரகாஷ்ராஜ், பிரித்விராஜ் என்னோட நண்பர்கள் என்பதால் என்னால் தட்டிக் கழிக்க முடியல. பொறுப்பை ஏத்துக்கிட்டதால உண்மையா உழைச்சேன். ஆனா, மத்தவங்ககிட்டேருந்து அந்த உண்மையான ஒத்துழைப்பை



# இப்படிப் பண்ணலாமா?”

எதிர்பார்க்க முடியல. குறிப்பாக, பிரகாஷ்ராஜ்கிட்ட! மத்தவங்க படத்துக்கு மூணு மணி நேரம் லேட்டா வரும் பிரகாஷ்ராஜ், என் படத்துக்கு ஒரு நாள் லேட்டா வந்திருக்காரு. ஓர் இயக்குநரா இது என்னைக் காயப்படுத்துச்சு. என்னோட கிரியேட்டிவிட்டி பாதிக்கப்பட்டது. பிரகாஷ்ராஜ் சரியான நேரத்துக்கு வராததுனால க்ளைமாக்ஸ் ஸ்பாட்ஸ் மட்டும் பதினொரு இடத்துக்கு மாத்தினேன். ஓர் இயக்குநரா அந்த வலி என்னன்னு எனக்குத்தான் தெரியும். இத்தனைக்கும் எண்பத்தைந்து நாட்கள்ல படத்தை முடிக்கணும்னு ப்ளான் பண்ணி, ஐம்பத்தேழு நாள்ல முடிச்சுக் கொடுத்தேன். ஆனால், பிரகாஷ்ராஜால மனத்தளவுல நிறைய காயப்பட்டேன். அவர் நல்ல நடிகர்; அதுக்கு மேல எனக்கு நண்பர். ஆனாலும், அதையெல்லாம் தாண்டி தொழில்னு வந்துட்டா சின்சியாரிட்டி வேணுமில்லையா. அது, சினிமாவைப் பொருத்த வரைக்கும் நிறையப் பேருக்கு இல்லை என்பது என் தாழ்மையான கருத்து. டூயட் மூவீஸ்ல நீங்க பார்ட்னரான்னு மத்தவங்க கேக்கற அளவுக்கு என்னோட உழைப்பு உண்மையா இருந்திருக்கு; இருக்கு. அவ்வளவுதான், மற்றதைப் பற்றி பேச விரும்பல” என்றவரிடம் இனி டூயட் மூவிஸ்’க்குப் படம் பண்ணுவீங்களா என்றால், “இப்போதைக்கு இல்லை என்று மட்டும்தான் என்னால் சொல்ல முடியும். மற்றவற்றை நேரம் வரும்போது பேசுவேன்” என்றார். இந்தப் பேட்டி அச்சாகும் முன்பு வரை இயக்குநர் விஜியின் வேதனை குறித்துக் கேட்க, பிரகாஷ்ராஜைத் தொடர்பு கொண்டோம். ஆனால், அவர் தரப்பிலிருந்து உரிய பதில் இல்லை. இதற்குப் பிறகும் பிரகாஷ்ராஜ் பதிலளித்தால் பிரசுரிக்கத் தயாராக இருக்கிறோம்!

– ஆ.முத்துராமலிங்கம்

# நீங்கள் கேட்டவை
# தராசு

# பாரத தரிசனம் விளையாட்டா? விபரீதமா?

● ஸ்கந்தசாமி, திருச்சி - 2

? இறக்குமதி பொருட்களால்தான் விலைவாசி உயர்வு என்கிறாரே ப.சிதம்பரம்?

! மக்கள் அவரிடமிருந்து எதிர்பார்ப்பது பொருளாதார விளக்கங்களை அல்ல; விலைவாசி சுமையிலிருந்து விடுதலை.

● எம்.சிவகுருநாதன், தஞ்சை

? 'இந்திய அரசியலின்



● ஆறுதல் நோக்கம்!

பீஷ்ம பிதாமகர் வாஜ்பாய்' என்று மன்மோகன் சிங் புகழாரம் சூட்டியிருப்பது...?

! 'பாரத ரத்னா' வழங்காமல் போனதற்குப் பதிலாக 'பீஷ்ம பிதாமகர்' பட்டத்தையாவது கொடுத்து வைப்போமே என்ற ஆறுதல் நோக்கமாக இருக்கும்!

● இ.சந்தானம், சென்னை - 35

? எங்களுக்குத் தெரியாத இந்த குஜராத் டுடே விஷயம்...? தமிழர்களை மட்டம் தட்டுவதற்காகவே நடக்கும் பார்ப்பன சூழ்ச்சி இது! குஜராத்தைக் காட்டிலும் பன்மடங்கு நன்றாகச் செயல்படுகிறது தமிழகம். 'தமிழகம் டுடே'யும் கொண்டு வாருங்கள்...!

! தமிழகம் பற்றி வாசகர்களுக்கு இங்கே 'குளோஸ்-அப்' பார்வை கிடைக்கிறது.



● பத்தாண்டு பயன்..!

தூரத்திலிருந்து பார்த்து வந்த குஜராத் பற்றிய நடுநிலை படப்பிடிப்புதான் 'குஜராத் டுடே' கட்டுரைகள். சந்தானம் உள்பட, கல்கி வாசகர்கள் இன்றைய இந்தியாவைப் புரிந்துகொள்ள நாங்கள் பண்ணும் 'சூழ்ச்சி'யின் விளைவாக, மேலும் பல மாநிலங்கள் குறித்தும் 'பார்ப்பன'-கேட்பன-விசாரித்து அறிந்தன கட்டுரைகள் நாளடைவில் பிரசுரமாகும்.

● என்.கோதண்டராமன், மதுராந்தகம் ☐

? குழந்தைகள், முதியோர், நோயாளிகள் என அனைவரும் குடிக்கும் பாலுக்கு, லிட்டருக்கு இரண்டு ரூபாய் விலை ஏற்றியுள்ளதே இந்த அரசு? மனது வைத்திருந்தால் இந்த இரண்டு ரூபாயை வேறு வகையில் ஈடு கட்டியிருக்கலாம் அல்லவா...?

! முடியுமே! அனாவசிய இலவசங்களையும் மான்யங்களையும் ஒழித்துக் கட்டினால், அத்தியாவசியப் பொருட்களை மலிவு விலைக்கு மக்களுக்கு வழங்க முடியும். அப்படிச் செய்யாததற்கு, அரசியல்வாதிகளின் சுயநலமே காரணம்.

● க.நா.இராஜேஸ்வரன்,
மொரட்டுப்பாளையம் ★

? 'ரேஷன் அரிசி கடத்தினால் ஏழு ஆண்டுகள் சிறைத் தண்டனை' என்று தமிழக அரசு அறிவித்துள்ளதே - இதனால் கடத்தல் குறைய வாய்ப்பு உண்டா?

! கடத்தல்காரர்களுக்கு எச்சரிக்கையும் தண்டனையும் அவசியம்தான். ஆனால், இவை மட்டும் கடத்தலைக் குறைத்துவிடாது. அவர்களுக்கு உடந்தையாக உள்ள ஊழல் அரசியல்வாதிகளையும் அதிகாரிகளையும் கண்ணி வைத்துப் பிடித்து, கடும் தண்டனை அளிக்க வேண்டும். அவர்கள் தப்பிவிடுகிறார்களே!

● டி.ஜெய்சிங், கோயமுத்தூர்

? காங்கிரஸ் தலைவராக சோனியா காந்தி பத்து ஆண்டுகள் இருந்தது சாதனையா?

! அவருக்குச் சாதனை, ஆனால், காங்கிரஸுக்கும் நாட்டுக்கும் சோதனைதான்!

● ஜி.பொன்ராஜ்குமார்,
இராஜபாளையம்

? தமிழகத்தில் மின் வெட்டு இல்லை; மின் தடைதான் உள்ளது என்று அமைச்சர் ஆற்காடு வீராசாமி கூறியுள்ளாரே - இந்த இரண்டுக்கும் என்ன வித்தியாசம்?

! குரங்குக்கும் கோட்டானுக்கும் உள்ள வித்தியாசம்தான்! மின்வெட்டு என்பது, தொழிலகங்கள் இத்தனை யூனிட்தான் பயன்படுத்தலாம் என்று உச்சவரம்பு விதித்து, அதற்கு மேல் போனால் அபராதம் போடுவது. மின்தடை என்பது மின் நிலையங்கள் மின் சாரமே அனுப்பாமலிருந்து வதைப்பது.



● கலெட்டி விளக்கம்!



● மௌனி பவனிப்பு!



● லேட்டஸ்ட் தர்க்கம்!

● அ.கஹைறல் ரஹ்மான்,
திருச்சி - 21

? 'ராமர் வாழ்ந்தாரா என்ற கேள்வியை எழுப்புவதா?' என்று மத்திய அரசுக்கு அத்வானி கண்டனம் தெரிவித்துள்ளாரே?

! ஹா!ய்! அது ரொம்பப் பழசு! 'சீதையை ராவணன் அபகரித்துச் சென்ற போது எந்த போலீஸ்காரர் தடுக்க முயன்றார்?' என்று கருணாநிதி லேட்டஸ்டாக கேட்டுள்ளது அத்வானிஜி கவனத்துக்குப் போகவில்லை போலும்!

● பா.அச்சுதன், வயலூர்

? புதுச்சேரி என்றதும் உங்கள் நினைவுக்கு வருவது எது?

! தற்போது அப்பகுதி பேராயத்தில்

☐ ரூ.100/- பரிசுபெறுபவர் :
என்.கோதண்டராமன்,
மதுராந்தகம்

எழுந்துள்ள தலித் கிறிஸ்துவர்கள் பிரச்னை.

● எட்டயின்டி. பசீ அஹமத், இராம்புரம்

? படம் சூப்பராக இருக்குது; திருமணம் சூப்பராக நடந்தது; சாப்பாடு சூப்பராக இருக்குது - இந்த சூப்பர் என்கிற வார்த்தை எப்படி வந்தது?

! இதென்ன கேள்வி? சூப்பர் ஸ்டாரிடமிருந்துதான்!

● பி.பத்மா, அரங்கநாதபுரம்

? பிற எந்தக் கட்சியும் செய்யாத அளவுக்கு, தொடர்ந்து நான்கு ஆண்டுகளாக பார்லிமெண்டில் அமளி செய்து வரும் பி.ஜே.பியை எதற்காக இனி தேர்ந்தெடுக்க வேண்டும்?

! வேறெதற்கு? அதே அமளியை காங்கிரஸ் செய்ய ஒரு வாய்ப்பு தருவதற்குத்தான்!

● ச.இராசன், திருச்சி

? தொடர்ந்து அடுத்த பட்டத்தில் விவசாயம் செய்ய விவசாயிக்குப் பணம் வேண்டுமே? மீண்டும் கந்து வட்டிக் காரனிடம்தானே போக வேண்டும்?

! வங்கிக் கடன் திருப்பித்தரப்பட்டு விட்டதாகக் கருதி விவசாயி வங்கியில் புதுக்கடன் பெறலாம் என்று அறிவிப்பு வந்துள்ளது. வங்கியில் கடன் பெற்று கந்துவட்டிக்காரருக்குத் திருப்பிச் செலுத்தி விடவும் வழி வகுக்கப்பட்டுள்ளது. அறிவிப்பெல்லாம் சரிதான்; நடைமுறையில் விவசாயி சந்திக்கும் சிக்கல்கள்தான் அதிகம்.

● மா.உலகநாதன், திருநீலக்குடி

? ராகுல் காந்தியின் பாரத தரிசனம் விபரீதமா? விளையாட்டா?

! இரண்டுமில்லை; திட்டமிடப்பட்ட ஸ்டண்ட் என்றும் ஒரு செய்தி! வறுமையில் வாடுவோருக்குத் தேவை அனுதாபமல்ல; பிச்சையிடுவதும் அல்ல. வாழ்க்கைக்கு ஏற்றதான வேலை வாய்ப்பு.

● லெ.நா.சிவகுமார், சென்னை - 33

? கேரம் போட்டியில் உலக சாம்பியனாக வெற்றி பெற்ற இளவழகிக்கு, தமிழக அரசு பத்து லட்சம் ரூபாய் ரொக்கப் பரிசு வழங்க முதல்வர் உத்தரவிட்டுள்ளாரே...?

! இதில் கல்கியின் பங்கும், பாலம் கட்ட உதவிய அணிலின் பங்குபோல், கொஞ்சம் உண்டு என்பதை நினைக்கையில் பெருமிதம்.

● ஆர்.பிரகாஷ், திருச்சி - 4

? தி.மு.க. மாநிலங்களவை வேட்பாளர் வசந்தி ஸ்டான்லி மீது மோசடி வழக்கு உள்ளதாமே?

! அவர் பேரில் இல்லையாம். அவர் கணவர் பேரில்தான் உள்ளதாகச் செய்தி வெளியாகியிருக்கிறது. இந்தியாவில் பரவலாக நடப்பது குற்றவாளிகள் அரசியல்தான். இதில் அதிசயமொன்றும் இல்லை.



● திட்டமிட்ட 'தரிசனம்'



● வெட்டும் தலையும்



● பிரதமர் பதவி



● '' அணியின் பங்கு...''

● ரூ.50/- பரிசு பெறுபவர்:

க.நா.இராஜேஸ்வரன்,

மொரட்டுப்பாளையம்

இன்னும் சில தினங்களில்...

விடுமுறை கொண்டாட்டம்

கோகுலம் எக்ஸ்பிரஸ்

புதிய பகுதி!

பல்சுவைகளில் 10 படக்கதைகள்



சுட்டிகளை அசத்தும் சூப்பர் ஹீரோக்கள்!

# கோகுலம்

ஏப்ரல் 2008 விலை ரூ.8/-

குழந்தைகளின் குதூகலம்!

# மங்கையர் மலரின்

# திருமண மலர்

## திருமண மலர் விளம்பரக் கட்டண விவரங்கள்

முதல் முப்பது வார்த்தைகளுக்கு ரூ. 500/-

30க்கு மேற்பட்ட வார்த்தைகள் ஒவ்வொன்றுக்கும் தலா ரூ. 15/-

வண்ணத்தில் ஹைலைட் செய்ய கூடுதல் கட்டணம் ரூ. 100/-

1" X 1" அளவில் வண்ணப் புகைப்படத்துடன் 30 வார்த்தைகள் அடங்கிய விளம்பரத்துக்கு ரூ. 800/- (அதிகப்படியான வார்த்தை ஒவ்வொன்றுக்கும் ரூ. 15/-)



வண்ணப் புகைப்படத்துடன் விவரங்கள் அடங்கிய அரை பக்க Profile விளம்பரம் ரூ. 2500/-



வண்ணப் புகைப்படம் அனுப்புபவர்கள், தெளிவான புகைப்படமாக, பாஸ்போர்ட் அளவில் இரண்டு பிரதிகள் அனுப்பவும். புகைப்படங்களை திருப்பி அனுப்ப இயலாது.

கட்டணத்தை நேரில் ரொக்கமாகவோ அல்லது சென்னை செக்காகவோ, வெளியூர் டிமாண்ட் டிராப்டாகவோ, மங்கையர் மலர் என்ற பெயரில் எடுத்து அனுப்பவும்.

விவரங்களுக்கு தொடர்பு கொள்க:

**மங்கையர் மலரின் திருமண மலர்**

Registered with the Registrar of Newspaper of India under No.1041/57*Registered No.TN/CC(S)DN/144/06-08-Licensed to post without prepayment under PMG's Licence No.WPP TN/CC(S)DN/70/06-08-Registered as a Newspaper in Srilanka.